Ims0403

# "ஒற்றுமை"

"பிறவிப் பெருங்கட னீந்துவர் நீந்தார்
இறைவ னடிசேரா தார்."—திருக்குறள்.


புஸ்தகம் V
Vol. V

1925ஞ மேமீ

சஞ்சிகை 7
Issue 7


## தோத்திரம்

---

வேண்டேன் புகழ், வேண்டேன் செல்வம்,
வேண்டேன் மண்ணும் விண்ணும்,
வேண்டேன் பிறப்பிறப்புச்,
சிவம்வேண்டார் தமை நாளும்
தீண்டேன், சென்று சேர்ந்தேன்,
மன்னுதிருப் பெருந்துறை இறைதாள்
பூண்டேன் ; புறம் போகேன் ;
இனிப்புறம் போகல் ஒட்டேனே !

—மணிவாசகர்.

# கவுச்சகரின் தபோமகிமை.

---

[சச்சிதாநந்த ராஜயோகிகள் வண்-வைத்தியேச்வரசுவாமி கோவிலிற் செய்த 'மார்க்கண்டேயர்' சரித்திர முதலாநாட் பிரசங்கம்.

கடகம் என்னும் நகரம் காவிரிநதி உற்பத்தியாகும் ஸ்தானத்தின் பக்கலிலுள்ளது. அந்நகரில், அந்தணர்களுட் சிரேஷ்டரும், சிவ பூஜா துரந்தரரும், பெரும் கருணைத் தடங்கடலாகிய சிவபெருமானை இடையறாது சிந்திப்பவரும், "திருவாய் பொலியச் சிவாயநமவென்று நீறணி" பவரும், மண், பெண், பொன் என்னும் மூவாசைகளை நீத்தவரும், "என் கடன் பணிசெய்து கிடப்பதே" என்ற முறை சிறிதும் பிறழாது தொண்டு பூண்டு ஒழுகுபவருமாகிய கவுச்சகரென்னும் நாமதேயத்தை யுடைய ஒருவருளர். அவர் சகல சாஸ்திரங்களையும் நான்கு வேதங்களையும் நன்கு கற்று, அவற்றின் கண்ணுள்ள உண்மைப் பொருளைச் சந்தேக விபரீதமறத்தேறித்தெளிந்தார். ஆன்மாக்களானவை உலகமென்னும் நாடகசாலையிலே எண்பத்துநான்கு நூறுயிர யோனிபேதங்களை யுடையனவாய்ப் பிறவிப் பெருங்கடல் வாய்ப்பட்டு, உழன்று பேரிடருறுவதைக் கண்டு சகிக்கலாற்றாது வருந்திய இப்பிராமணச் சிறுவர் சிறிதும் கரைகாணாத அப்பிறவிக் கடலைக் கடக்க வேண்டினார். சற் கருமமாகிய தமது கடமையைப் புரிய வேண்டி முன்னைப் பழம் பொருட்கும் முன்னைப் பழம் பொருளாகிய சிவ பெருமானை நோக்கித் தவம் செய்தற் பொருட்டுத் தமது பிதாவிடம் விடைபெற்றுத் தபோவனமடைந்தார். அங்கு அழகிய ஓர் சோலையின் மத்தியில்

தாமரை மலர்கள் செறிந்த தடாகமொன்றிருப்பக் கண்டு அதன் பக்கலிருந்தார். இம் "மானிடதேகந் தானும் வருத்தது மனவாக்காயத் தானிடத்தைந்து மாடுமான்பணிக்காக" எனத் தேர்ந்தமையினாலும், இப்பிறவி "பெறுதற்கரியபிறவி" என்றும் "அறிதற்கரிய அவநி" என்றும் நன்கு அறிந்தமையினாலும் "தவம் செய்வார் தங்கருமஞ் செய்வார்" என்றபடி அரிய தவத்தைச் செய்வாராயினர். இங்ஙனமாகவும், மக்கள் எமது சமயாசாரியர்களாகிய நால்வர் திருவாய் மலர்ந்தருளிய சற்போத வழி ஒழுகாமலும், "பூக்கைக் கொண் டரன் பொன்னடி போற்" றாமலும், "நாக்கைக்கொண்டு அரன் நாமம் நவிற்" றாமலும், இந்த "ஆக்கைக்கே இரை தேடி அலமந்து" ஈற்றில் "காக்கைக்கே இரையாகிக் கழி"ந்து பெறுதற்கரிய பெரும்பேற்றையும் இழக்கின்றனரே. இவர்களையே "அவம் செய்வார் ஆசையுட்பட்டு" என ஆன்றோர் கூறுவர்.

இக்கவுச்சக முனிவருடைய தவத்துக்கு அவர் பூர்வ ஜென்மங்களிற் செய்துகொண்ட பெரும் புண்ணியமே வித்தாகவிருந்தது. இப்பிறப்பிற் கற்றுக்கொண்ட உண்மைக் கல்வி அவருக்கு இன்றியமையாத் துணைப்புரிந்தது. தாம் கற்ற "அலகில் கலையின் பொருட் கெல்லை ஆடுங்கழலே" எனத் தெளிந்தவராய் நாட்டப்பட்ட ஒரு கட்டை போன்றிருந்தார். அங்கு நீர் பருகும் பொருட்டுச் செல்லும் பசுக்கள் கவுச்சகரை ஓர் ஆவுரோஞ்சுக்கல்லென வெண்ணித் தங்கள் தினவு தீரும் வண்ணம் உரோஞ்சிச் செல்லும். ஏனைய மிருகங்களும் அவரைக் கட்டையென மதித்துச் செல்லும். சுவாசத்தை அடக்கி அழியாத பேரின்பவாரியிற் குளித்திருப்பவராதலினால் பசுக்கள் உரோஞ்சுதலை அவர் அறிந்தாரல்லர். பலகாலம் தவம்புரிந்த பின்னர் அவரது தவநிலையைப் பரிசோதிக்கும் பொருட்டு இந்திர

ஞல் ஏவப்பட்ட அரம்பை முதலான தேவ கன்னியர் நால்வரும் அவர் முன் சென்று தம்மால் ஆவனபுரிந்தும் வாய்த்திலராய் மீண்டனர். அப்பால் விட்டுணு மூர்த்தி அங்குப் பிரசன்னமாயினர். அவர் கவுச்சக முனிவருடைய பெருந்தவங் கண்டு ஆனந்த மடைந்து மலர்போன்ற இரு கரங்களாலும் முனிவரைக் கட்டித் தழுவி “முனிவனே, மிருகங்கள் தங்கள் நினைவு தீரும் வண்ணம் உன் மீது உரோஞ்சிச் செல்வதால் உன் பெயர் மிருகண்டுயர் என வழங்கக் கடவது; சந்திர சடாதாரியாகிய சிவபெருமானுடைய திருவருட் பிரசாதம் உனக்குக் கிடைப்பதாக” வெனக் கிருபை பாலித்தருளி அந்தர்த்தானமாயினர்.

பின்னர் மிருகண்டுயர் (கவுச்சகர்) தமது பிதாவிடஞ் சென்று தாம் தவஞ்செய்த வரலாற்றை விபரமாக அவருக்குக் கூறினர். மிருகண்டுயருடைய தவப்பெருக்கைக் கேள்வியுற்ற உலகம் “இவன் தந்தை என்னோற்றான் கொல்” எனப் புகழ்ந்து போற்றியது. சுவர்க்க உலகமும் ஏனைய உலகங்களும் அவர் தவங் கண்டு அதிசயித்தன. இங்ஙனம் சின்னாட் கழிதலும், ஐம்புல வேடரால் இடர்ப்படுத்தப்பட்டு உழன்று திரிந்து அவத்தொழில் புரியும் எமக்குச் சிவபூஜா மகத்துவத்தை விளக்கிக் காட்டுவதற்கும், அங்ஙனம் புரிவோர் யமனுடைய ஆக்கினைக் குட்படாது “ஈசன் பல்கணத் தெண்ணப்பட்டு, சிறுமானேந்திதன் சேவடிக் கீழ்ச்சென்று, இறுமாந் திருப்பர்” என்பதை வற்புறுத்துதற்கும் ஓர் சற்புத்திரர் இக்கவுச்சக முனிவர் மாட்டுத் திருவவதாரஞ் செய்யவேண்டிய ஏது இருந்தது. இதனால் அது நிகழவேண்டிய காலம் சமீபித்தது. எனவே கவுச்சக முனிவரின் பிதாவாகிய குச்சகரிடத்துத் திருவருள் வசத்தால் ஓர் நினைவு உதித்தது என்பதாம்.

இ. கா.

# ஆத்மீக முயற்சியும் பொறுமையின் அவசியமும்.

நமது நாட்டில் பட்டிமுதல் பட்டணம்வரை சென்று சென்று தனது மந்திர தந்திரச் செய்கைகளாற் கண்ணுறுவோரை மயக்கிக் கவரும் ஜாலவித்தைக்காரனை யறியாதவர் யாவர்? இவன் அரைமணிக்காலத்துள், ஒரு மாங்கொட்டையை யாவரும் பார்க்க நட்டுச் செடி மரமாகத் தோற்றுவித்துப் பின் சின்னேரத்தில் பூத்துக் காய்த்துப் பழுக்கின்ற தன்மையில் காட்டுகின்றனனே! இவன் தன் கைவிரல்களைச் சாமர்த்தியமாக அசைப்பதனாலன்றோ முதலில் இளஞ்செடியாகவும், பின் வளர்மரமாகவும், பின் பழுத்துத் தொங்குகின்ற குலேகளையுடையதாகவும் காண்பிக்கின்றனன். இந்த ஜாலவித்தைக்காரன் வித்தையால் ஒரு சிறுபொழுதில் வித்து மரமாகிப் பலனளித்தமைபோல, சிலர் தாம் துவக்கிய முயற்சி முதல் நாளிலேயே முழுப் பலனையும் அளிக்கவேண்டுமென்று ஆசைப்படுகின்றார்கள். ஒரு காரியத்தைச் சாவதானமாகச் செய்து முடிக்க அவர்கள் நாடுவதில்லை. காரியம் செய்யப்பட முற்பட்ட சில பொழுதிலேயே தங்களுக்கு லாபம் அல்லது அதிர்ஷ்டம் கிட்டவில்லை யென்பதே பெருங்கவலையாகின்றது. விரும்புவோரிடம் விரைந்து செல்லாததும், காணமுற்றதுமான அதிர்ஷ்டத்தை அபேட்சிப்பது பொருத்தமற்ற காரியம். அவர்கள் இடையறாது ஒழுகும் ஊற்று நீர்ப்பெருக்கினைப் போன்று ஒன்றின்பின் ஒன்றாய் மென்மேலும் வெற்றியே பெறவிருப்ப முற்றவர்களாகின்றார்கள். தாங்கள் எதிர்பார்த்த பலன் காலங்கழித்துக் கிடைப்பதாயின் அதுவரை பொறுத்திருக்கமாட்டாத வராகின்றார்கள். ஆனால், அவர்கள் எண்ணம் ஏகதேசமாகவே நிறைவேறுகின்றது. ஏனெ

னில், சடப்பொருளின் உறுதியான நல்ல வளர்ச்சி குறித்த காலஎல்லையில் ஏற்படுவதாம். ஒரு செங்கற் சுவர்க் கட்டடம் எப்படி ஒரே நாளில் இயற்றப்படாமல் பல நாளில் செங்கல்லின் செங்கல்லாகவும், சுவரின் சுவராகவும் பொறுமையான முயற்சியுடன் அமைத்து ஏற்படுவதாகின்றதோ, அப்படியே, சடப்பொருள் அபிவிருத்தியும், பூரணமாகக் கட்டிமுடிந்த கட்டடத்தின் தன்மையும் உறுதியும் அதனை அமைக்கின்ற காலத்திற் செலுத்திய கவலைக்கும் நிதானத்துக்குந் தகுந்தபடி அமையும். ஆகவே வாழ்வின் பெருவளர்ச்சியும் நமது செய்கையில் எளிதில் ஏற்படுவதன்று. தாங்கள் எதிர்பார்த்த விஷயங்கள் விரைவில் கைகூடாமையினால் ஆகுந் துயரம் இத்தகையோர்களால் பொறுக்கக் கூடாததாம். ஆனால் அதிர்ஷ்டம் இவர்கள் விஷயத்தில் செய்வது ஒன்றுமில்லை. ஆதலால் ஒன்று அவர்கள் பொறுத் திருக்கவேண்டும் அல்லது அதிர்ஷ்டத்தை எதிர் பாராமலே யிருக்கவேண்டும்.

பொறுமையற்ற சில ஆத்மாக்கள் தாங்கள் செய்யுங் காரியங்களில் ஒன்றில் அல்லாவிட்டால் ஒன்றில் ஜெயமடைய விரும்பி முயற்சிக்கிறார்கள். ஆனால் ஒன்றையாவது முடிவுவரை சாவதானமாய்ச் சரிவரக் கவனியாது எல்லாவற்றிலும் தங்களுக்கு மென்மேலும் நஷ்டம் பெருகக் கூடிய முறையிலேயே காரியஞ் செய்கின்றார்கள். ஆத்மீக முயற்சியில் பொறுமை யற்றவர்களும் இத்தகைய நஷ்டத்தையே அடைகின்றார்கள். இகவாழ்க்கையில் மக்களுக்குத் திடீரென்று வாழ்வுப் பெருக்கம் ஏற்படுவதில்லையாயின், பரவாழ்வில், இன்பநிலை யெய்துவது எளிதிலாகுங் காரியமோ? ஆத்மீக முயற்சியில் ஒரு நாளிலேயே ஆத்மீக ஐஸ்வரியத்தைபடைவிக்கும் மாயாஜாலம் எதுவுமில்லை. எக்காரியங்களுக்கும் அவசியமான பொறுமையுற்ற வேலையின்

டலனே அபிவிருத்தியாம். ஆனால், சில மனிதர் பொறுமையா யிருக்கமுடியாது. அவர்கள் ஆத்மீக முயற்சி புரிவ தெல்லாம் தங்களுக்கு உடன் கைமேற் கிடைக்கும் இன்பத்தைப் பொறுத்தேயுள்ளது. அவ்வித இன்பங் கிடைக்கக் கூடாத தாயிருப்பின், தாமதித்தே கவனிக்கப்படுவ தொன்றாயின், தேடுவதில் களைப்பேற்படுவதா யிருப்பின், அவர்கள் ஆத்மீக முயற்சி செய்வதைவிட்டு அதைவிட மிகுந்த இன்பத்தைத் தரக்கூடிய வேறுமுயற்சியில் தலையிடுகிறார்கள். என்றாலும், நமது அன்றாட ஆத்மீக அநுபவமாவது கடவுள், தம்மிடம் உள்ளன்பு செலுத்துகின்றவனை, தமது சந்நிதான வாயிலில் நீண்ட நேரம் காக்க வைத்த பின்னரே, தமது சந்நிதானத்தில் சேர்க்கிறாரென்பது. இதனைக் கடவுள் திருமுன்பையடையத் தேவர் முதலிய கணத்தவர்களும், நான் முன் நீ முன் என விரைந்து முந்துகின்ற காலத்துக் கடவுள் கணநாதர் காலமும் பக்குவமும் உணர்ந்து அன்பர்களைக் கடவுள் திருமுன் சேர்ப்பிக்கின்றார் என்னுமுண்மையும் வலியுறுத்தும். மேலும் இஸ்ரவேலர்கள் தாங்களடைய விருந்த வாக்களித்த நாட்டை யடையுமுன் காட்டினூடே அலைந்து திரிய நேர்ந்ததாகக் குறிக்கப்பட்டுள்ளது. இவ் விஷயத்தை ஒவ்வொரு தினவாழ்க்கையிலும் பிரத்தியட்சமாகக் காணலாம்.

முத்தி நெறியில் செல்லும் ஒவ்வொரு யாத்ரீகரும், சந்தேகமும் சோதனையுமாகிய காட்டைக் கடந்து செல்ல வேண்டியவராகிறார்? கடவுள் ஏன் அவ்விதம் பணித்திருக்கிறார்? தம்மைத் தரிசிக்க நாடுகின்ற அன்பரைத் தமது சந்நிதானவாயிலில் ஏன் தாமதித்திருக்கச் செய்கிறார்? இவ்விதம் செய்வது கடவுளைத்தரிசிக்க ஆர்வ மிகுந்திருக்கின்றவருக்கு அளவற்ற நன்மையைச் செய்யவல்லது. அதாவது அவ்வன்பரின் ஆத்மீக வேட்கையையும் ஆத்மீக

தாகத்தையும் அதிகப்படுத்துகிறது. அவர் தீர்மானத்தைப் பலப்படுத்துகிறது, அவர் மனதை உயர்த்துகிறது, தூய்மைசெய்கிறது, அவர் நம்பிக்கையை ஆராய்ந்தறிகிறது. ஆகவே அவருடைய சந்நிதி வாயிலில் பொறுமையுடன் காத்திருக்கக் கூடாதவர் அவரைத் தரிசிக்க வேண்டுமென்று உண்மையாக வந்தவரல்லர்; வேறு என்ன காரியத்தையோ நாடி வந்தவரே. கடவுள் நல்லவர். அவரை நம்பியிருக்கின்றவருக்கு ஒருபொழுதும் கெடுதியில்லை என்ற உண்மையில் உண்மை நம்பிக்கையற்றவர்களே அன்னோர். பொறுமையின்மையாவது நம்பிக்கைக் குறைவே

பண்டைக்காலத்தில் விளங்கிய தீர்க்க தரிசிகளின் வாழ்நாட் குறிப்புகளை வாசிக்கும் நம்மை மிகவும் கவனமாய்க் கவர்வது எது? அவர்களுடைய மேலான குணங்களில் எந்தக் குணம்சத்தைக் காண்கிறோம்? நாம் காண்பது கடவுளின் நலத்திலும், உயர்ந்த சாஜரீக உண்மையிலும் எவற்றாலும் வெல்லப்படாத நம்பிக்கைத் தன்மையையன்றோ? நம் இருதயத்தை வாட்டிய சோதனைகளும் சந்தேகங்களும் அவர்களுக்கு ஏற்படாமலா போயின? அவர்களும் மனிதர்களே. ஆகவே, பொதுவாக நமக்கு ஏற்பட்ட சோதனைகளும் தொந்தரவுகளும் அவர்களுக்கும் ஏற்படலாயின. அவர்களிற் சிலர் அளவிறந்த சோதனைகளுக்கும் துன்பங்களுக்கும் ஆளாகியுள்ளார். ஆனால் அவற்றையெல்லாம் வென்று மேம்படக் காரணம் என்ன? உண்மைப் பொருளாகிய கடவுளிடத்துக் கொண்டிருந்த உறுதியான நம்பிக்கையும், ஆற்றொணாத்துயரும் சோதனையும் ஏற்பட்டபொழுது அவற்றைக் கடவுள் திருமுன் பொறுமையோடு சகித்துக் காத்திருந்தமையுமே. அவர்களுடைய வாழ்வு எப்பொழுதும் பிரகாசமாயுமிருக்கவில்லை. சாதாரண மக்கள் வாழ்விலும் ஒளிகுறைந்ததாயும் மிகுந்த

துன்பம் நிறைந்ததாயுமே விளங்கியது. எனினும், கடவுள் அருகிலிருக்கின்றார் என்ற உணர்ச்சி வசத்தால் மகிழ்ச்சியுடையவரே. சிரத்தை விசுவாசமே அவர்கள் உள்ளத்தில் ஜொலித்துக்கொண்டிருப்பது. இக்காரணத்தால் பீரங்கிக் குண்டின் முன்னரும் பயமின்றித் துணிந்து நிற்கக் கூடியவர்; காத்துக் கவனிப்பதில் களைப்புற்றவரல்லர்.

கடவுளின் கிருபைக்கு ஆளாயிருக்கின்ற காலத்தும் அவரோடைக்கியப்பட்டிருக்குங் காலத்தும் கடவுள் அருகிலுள்ளா ரென்னும் உணர்ச்சி ஒருவர்க்கு எளிதில் ஏற்படும். உண்மை நம்பிக்கையற்றவர் இதயத்துக்குக் கடவுள் புறம்பானவரானபடியால் அன்னவர் கடவுள் சன்னிதானத்துக்கும் புறம்பானவராகவே, துக்க சாகரத்தில் அழுந்துபவரன்றி கடவுள் நம்பிக்கையால் களிப்பும் பலமும் அடையக் கூடியவரல்லர்.

ஆகவே, ஆத்மீக முயற்சிக்கு விசேஷமாக வேண்டப்பெறுஞ் சிறந்த குணம் பொறுமையே. இவ்வுலக வாழ்வில் நன்மை யடையவேண்டும் ஒருவன், நிலையற்ற புத்தியுடன் ஓர்மையாக ஒரு காரியத்தைச் செய்வானாகில் குறித்த பலனையடையக் கூடாதவனுவானெனில் பரவாழ்வில் நன்மையடைய விரும்பி முயற்சிக்கும் ஒருவன் எவ்வளவு ஓர்மையுடனும் பொறுமையுடனும் தன் காரியத்தைச் செய்து வெற்றியடைய வேண்டுமென்பதைச் சொல்லவும் வேண்டுமா ?

'புலவரகத்தான்'

புலவரகம் } பு. சி. புன்னைவனநாதன், தலைமைத் தமிழாசிரியர்,
22—4—25. } சர்ச்சமிஷன் காலேஜ், நெல்லை.

---

ஓம்

## தமிழில் வடமொழி கலத்தல் ஆகாது.

(பல்லாவரம் 'வித்யோதயர்' மகளிர் கல்லூரியின் தலைமைத் தமிழாசிரியரும், பல்லாவரம் பொது நிலைக்கழக மாணவியாருமான திரு நாகை நீலாம்பிகையம்மை எழுதியது.)

தமிழ் மொழியில் வடசொற்களைக் கொண்டு வந்து கட்டாயம் சேர்த்தல் வேண்டுமென்றும், தமிழையும் வட மொழியையும் நாம் நம் இரண்டு கண்களைப்போல் நினைத்தல் வேண்டு மென்றும், உயிரோடிருக்கும் மொழியாகிய தமிழிற் பிற மொழிகள் கலப்பது இயற்கை என்றும் சிலர் தந்தமக்குத் தோன்றியவாறெல்லாம் ஏதுவின்றிக் கூறுகின்றார்கள். இவைகளை ஆராய்வாம்.

தமிழ்மொழிக்கு வடமொழிக் கலப்பு எதற்காக கட்டாயம் வேண்டும்? தமிழ் ஏதேனும் குறைபாடுடைய மொழியா? தமிழிலோ போதுமான சொற்கள் நிறைந்து கிடக்கின்றன. எல்லா உறுப்புக்களும் செவ்விதின் அமையப்பெற்று எழில் மிக்கு விளங்குகின்ற ஒரு நங்கையின் கை கால் முதலிய உறுப்புகளை வெட்டிப் புறத்தே எறிந்து விட்டு, அவை யிருந்த இடங்களில் வேறு குரங்கின் கைகளையும் கால்களையும் பொருந்த வைத்தால் அந் நங்கையின் உடலழகு மறைவதோடு அவள் தன் அழகிய உறுப்புக்களையும் பெற இயலாது வருந்துவள்! அதுபோல், பண்டை அறிவுடையோரால் செவ்விதின் அமைக்கப்பட்ட தமிழ் மொழியின் உறுப்புக்களாகிய பல பழந்தமிழ்ச் சொற்களை இல்லா

மல் ஒழித்து, வேறு வடசொற்களை அதனிற் சேர்ப்பதால் அது தன் இனிமையும் பெருமையும் இழந்துபோமன்றோ? வடமொழிக் கலப்பின்றி முற்காலத்தில் எழுதப்பட்ட தமிழ் நூல்களின் தூய செந்தமிழ் நடைப்போக்கின் இன்சுவையினையும் பொருள் ஆழத்தினையும் உற்று நோக்கி மகிழாத அறிஞர் யார்? 'திருக்குறள்' ஒன்றை நோக்கினும் யாம் கூறும் உண்மை விளங்கும். 'திருக்குறளில்' உணர்த்தப்படாத பொருள்கள் இல்லை. அப்பொருள்கட்கெல்லாந் தூய தனித்தமிழ்ச் சொற்கள் இருக்கின்றன அல்லவோ? அங்ஙனம் எல்லாப் பொருள்களையு முணர்த்தும் எல்லாச் சொற்களும் தமிழில் இருக்கவும், தமிழைக் குறைபாடுடைய மொழி என்பவர் பழந்தமிழ் நூல்களைத் தினைத்துணையும் அறியாதவர்களென்பது புலனாகின்றதன்றோ? ஏராளமான சமஸ்கிருதச் சொற்களைச் சேர்த்துப் பொருள் ஆழமின்றி எழுதப்படும் இக்காலத்துத் தமிழ் நூல்களைக்கண்ணுற்காணவும் அறிஞர் வருந்துகின்றனர்! சமஸ்கிருதக் கலப்பால் ஐந்நூறு ஆண்டுகளாக நந்தமிழ்மொழி சீர்கெட்டு நிற்குந்நிலையைக்கண்டு மனம் புழுங்காத்தமிழரைத் தமிழர் என்றுஅறிவுடையோர் அழைப்பரோ? ஒருபோதும் அழையார். தமிழுக்குக்கேடு சூழ்பவர்கள் தமிழரேயன்றி வேறு மொழிக்குரியாரல்லர். தமிழ் கற்பித்துக்கொண்டு அதனால்வரும் வருவாயும் பெற்று வாழும் ஆராய்ச்சி அறிவில்லா இக்காலத்துத் தமிழ்ப் புலவர்களிற் சிலரோ தமிழைக் குறைகூறித் திரிகின்றனர்! இங்ஙனமாகத் தம்மை வளர்க்கும் தாய் மொழியைக் குறைகூறித்திரியும் அவர்களைத் தமிழ்ப் புலவர்கள் என்றழைத்தலைவிடத் தமிழ்ப் பகைஞர் என்று அழைத்தலே பொருந்தும். தமிழின் சொற் செல்வமும், புதுப் பொருள்களை வழங்குதற்குத் தமிழினின்றே சொற்கள் படைக்கும் வகையும் 'தனித்தமிழ்ப் பாதுகாப்பு' என்

னும் கட்டுரையில் விரித்து விளக்கினேமாகையால் அதனையே மீண்டும் விரித்துப் பேச வில்லை.

இனித், தமிழையும் வடமொழியையும் நம் இரண்டு கண்கள்போற் பாது காத்தல் வேண்டுமென்பதனைச் சிறிது ஆராய்வாம்: சமஸ்கிருத மொழியைக் கண்போற் பார்ப்பதற்கு அளவில்லாப் பார்ப்பனர்கள் முன்னெழுந்து விட்டனர். அதனைக் கண்ணுக்கு மேலாக தம் உயிர்போன்றும் பாதுகாத்து வருகின்றனர். ஆனால், நந்தமிழர்களிலோ தமிழைக் கண்போல் நினைத்துப் பாது காப்பவர்கள் ஒரு சிலரேயாவர். தமிழரிற் பெரும்பாலார் சிறிது பழுதுபட்டிருக்கின்ற தமிழாகிய கண்ணைப் பாதுகாவா விடினும் விடுக! அக்கண்ணை மேலும் மேலும் வடசொற் கலப்பாகிய இருப்புக் கோல் கொண்டு குத்தி முழுதும் பாழ்படுத்த முயல்பவர் செயலை என்னென்பேம்! ஐயகோ! இவர் தம் கொடிய முயற்சியை நினைந்து நினைந்து தமிழ்த் தாய் ஓலமிடுகின்றனள்! நாம் நம் இரண்டு கண்களில் ஒன்றைத் தமிழாகவும், மற்றொன்றைச் சமஸ்கிருதமாகவும் வைத்தேனும் ஆராய்ந்து பார்ப்போம். இரண்டு கண்களில் ஒன்று பழுதுபட்டு இறந்து பட்டபின் அதனை உயிர்ப்பித்துப் பாதுகாத்தல் எங்ஙனங் கூடும்? சிறிது நோய்ப்பட்டு உயிரோடு இருக்கும் மற்றொரு கண்ணைக் கண்ணுங் கருத்துமாகப் பார்த்தல் நல்லது. இறந்துபட்ட கண்ணைப் பாதுகாத்தலால் நாம் அடையும் பயன் ஒன்றும் இல்லை. உயிரோடுள்ள மற்றொரு கண்ணைப் பாதுகாப்போமாயின் அதன் வழியாக உலகிலுள்ள பலபொருள்களையுங் கண்டு மகிழலாம். அதேபோல் மக்களின் சொல் வழக்கில் இல்லாது இறந்தொழிந்த சமஸ்கிருதத்தால் நாம் அடையும் பயன் ஒரு சிறிதும் இல்லை. அதனை உயிர்ப்பித்தல் நம்மால் இடலாதவொன்றாம். நீண்டகாலமாக மக்களாற் பேசப்

பட்டு இன்றும் தன்னினம் குன்றாது உயிரோடிருக்கும் மொழியாகிய நந்தமிழை வடசொற் கலப்புக்கு இடந்தரா மற் பாதுகாப்போமாயின், அதனால், நாம் அதனைத் திருத் தமாக வழங்கித் திருந்திய அறிவும் திருந்திய செய்கையும் அடைவோம்.

இனி, உயிரோடிருக்கும் மொழியாகிய தமிழோடு பிறமொழிகள் கலப்பது இயற்கை ஆகலின், தமிழோடு வடசொற்கள் கலப்பது இயற்கையேயாகும் என்பார் கூற்றை ஆராய்வாம்.

ஒரு மொழிக்குரியார் மற்றொரு மொழியாரோடு கலத்தல் ஏற்படுமாயின், ஒரு மொழிச் சொல் மற்றொரு மொழியில் கலக்கும். ஆரியர் தமிழரோடு கலந்தமையின், ஆரியச் சொற்களைத் தமிழர் வழங்கினர். தமிழ்ச்சொற் களை ஆரியரும் வழங்கினர். இப்போது ஆங்கிலர் நம் மோடு நெருங்குவதாற் பல ஆங்கிலச் சொற்களையும் வழங் குகின்றோம். நடுப்பட்டகாலத்தில் தமிழரோடு துருக்கர் சிறிது நெருங்கிப் பழக நேர்ந்தபோது, 'நாஸ்தா' 'ஜல வாதி' 'ஜஸ்தி' முதலான பல இந்துஸ்தானிச் சொற்களை யும் தமிழர் வழங்கத் தலைப்பட்டனர். இங்ஙனம் பேச்சு வழக்கிற் பிறமொழிச் சொற்களையும் நாம் வழங்குவது இயற்கைதான். பொதுமக்கள்பால் இவ்வியற்கையைத் தடுத்தல் முடியாததொன்றும். நாம் பலரிடமும் பேசு கின்ற கலப்புத் தமிழில் நூல் எழுதுவது சிறந்ததா? அல் லது, நமதறிவை ஒரு நிலைப்படுத்தித் தனித்தமிழில் எழு துவது சிறந்ததா? நாம் பற்பல முயற்சிகளைச் செய்தலா னும், நினைத்தவற்றை உடனே தெரிவித்தல் வேண்டு மென்ற எண்ணத்தாலும், அறிவை ஒரு நிலைப்படுத்தித் திருத்தமாகப் பேச மனவெழுச்சி இன்மையாலும் சோம்ப லுற்று நாம் முன்வருஞ் சொற்களைப் பின் வைத்தும், பின்

வருஞ் சொற்களை முன் வைத்தும் பிறமொழிச் சொற்களைக் கலந்தும் பேசிவிடுகின்றோம். ஏற்கெனவே அறியாமை வழிப்பட்டுக் கிடக்கும் நாம் அறிவுபெற வேண்டுவது முதன்மையாகும். ஒன்றும் அறியாமல் அறியாமை இருளிற் கிடந்துழலுகின்ற ஒரு குழவிக்கு அதன் தாயானவள் பையப் பைய எல்லாப் பொருள்களையும், அவைகளின் பெயர்களையும் சுட்டிக் காட்டிக் காட்டி அறிவித்தலான், அக் குழவி அறியாமையினின்றும் விடுபட்டுப் பொருள்கள் பலவற்றையும் அறிந்து அறிவு விளக்கப் பெறுகின்றது. நாம் கல்வி கற்பது எதற்காக? சோம்பலைவிட்டு முயற்சியும் அறிவையும் பெறுதற்கன்றோ? நாகரிகமின்றி, அதாவது செயற்கை அறிவு வளர்ச்சியின்றி அழுக்காடை உடுத்து ஊர் ஊராய் அலைந்து இரந்துண்டு உயிர்வாழும் குறவர் வாழ்க்கை இயற்கையாகும். அக் குறவர் நாகரிக வாழ்வு பெறவேண்டின் அவர்கள் யாது செய்தல் வேண்டுமெனிற் கூறுவாம், அவர் தமது இயற்கை அறியாமையை மாற்றிச் செயற்கை அறிவாற் குளித்து முழுகித் தூய ஆடை அணிந்து தூய உணவு உண்டு வீடுகள் அமைத்து அவைகளில் வாழ்ந்து கல்வி அறிவைப் பெருக்கி இங்ஙனமாகத் தம்மைத் திருத்திக் கொள்ளுதல் முதன்மையாகும். மக்கள் முதன் முதல் தோன்றிய காலத்து ஆடையின்றிப், பச்சைக் காய்கனி கிழங்குகளைத் தின்றுகொண்டு மரங்களின்மேல் உறங்கிக் காலங் கழிப்பது அவர்கட்கு இயற்கை யாயிருந்தது. ஆனால், அவர் வழியராய்த் தோன்றிய நாமோ செயற்கை அறிவாற் றிருந்தித் தூய அழகிய நடை உடை எண்ணங்கள் உடையராய் அறுசுவை உணவு உண்டும், மாடமாளிகைகளில் வாழ்ந்தும் வருகின்றோம். இன்னும், நாம் பருகும் தண்ணீரில் நச்சுப்புழுக்கள் நிறைந்திருக்கின்றன. இஃது இயற்கையிலுள்ளது. இவ்வியற்கை

நீர் நம் உடம்புக்கு ஒவ்வாமை கண்டு அறிவுடையோர் செயற்கை அறிவால், அக்குளிர்ந்த நீரை நன்ருகக் காய்ச்சி அந்நச்சுப் புழுக்கள் இறந்தபின், வடிக்கட்டி உட்கொள்ளு கிருர்கள். நாம் கருத்தும் முயற்சியும் இன்றி வாய்க்கு வந்த வாறு பேசுவதால் பிறமொழிச் சொற்கள் தமிழிற் கலந்து விடுகின்றன. அறிவும் முயற்சியும் இல்லா இவ்வியற்கை நம் தமிழ் மொழிக்குத் தீமை உண்டுபண்ணுதலால், நாம் கருத்தோடு மிக முயன்று பிறமொழிச் சொற்களாகிய நச்சுப் புழுக்களைத் தமிழாகிய தண்ணீரினின்றும் வடிக்கட்டித் தெளிந்த தீந்தமிழ்ப் புனலைப் பருகுதற்குக் கடமைப்பட்டிருக்கின்ருேம். இவ்வாறின்றி, இயற்கையில் உள்ளபடியாகவேதான் தமிழைப் பல மொழிச் சொற்களோடுங் கலந்து நஞ்சாக்கிப் பயன் படுத்துவேமெனின், நச்சுயிர் நிறைந்த நீரை இயற்கையிலுள்ளபடியே யெடுத்துப் பருகுவார் அதனுல் தம் உயிரை இழத்தல் போலத், தூயதல்லாக் கலப்புத்தமிழைப் பயன் படுத்துவோரும் தமிழராகிய தம் பண்டை உயர் நிலைகெட்டுச், சில நூற்ருண்டுகளில் தமிழர் ' என்னும் ஒரு வகுப்பாரே இலரென்னும்படி மறைந்து ஒழிவர் ஆதலாற், பழமை தொட்டு நாகரிகத்திற் சிறந்த தமிழ் நன்மக்கள் வழியிற்ருேன்றிய நம்மனேர் தமது சிறப்பையும் நாகரிகத்தையும் நிலைநாட்டி, அவற்றைப் பிறரும் பின்பற்றுமாறு செய்வார்களானல் அவர்கள் தமக்கும் பிறர்க்கும் பயன்பட்டவராய்ப் புகழ் ஓங்கி வாழ்வர். அங்ஙனம் தாம் செய்தற்குரிய பெருங்கடமையையும் தமது நன் முயற்சியையும் விட்டுப் பிறர் சொல்லுமாறெல்லாம் தலையாட்டி பாவைகளைப்போற் கருத்தும் முயற்சியும் இன்றிச் சோம்பேறிகளாய் நடந்து, பல்லாயிரம் ஆண்டுகளாய் அறிவும் நாகரிகமும் மிக்க நந்தமிழ்ச் சான்ருேர்களாற் பெரிதும் போற்றி வளர்க்கப்பட்ட அரு

மைச் செந்தமிழைச் சீர் குலைப்பாராயின், இக்காலத்துத் தமிழர்களின் நிலையாதாமோ அறிவுடையீர் நீரே அறிந்து கொண்மின் !

## தென் தமிழ் மாட்சி.

அலைகாவளனும் அமிழ்தினுமினிய நீருஞ்சுவையும் பழமையுமுடையவற்றிற் கெல்லாம் பழமையுடைத்தாய் எவ்வகை மொழிக்கும் பின்வாங்காத பொற்புறு பெற்றியிற் கவின் பெற்றுத்திகழ்வது தெய்வமாட்சிச் செந்தமிழொன்றே. தமிழ் நூல்களெவற்றினுந் தொன்மை பெற்றிலகுறும் ஒல்காப் பெருமைத் தொல்காப்பியம், அக்காலத்தே மூவேந்தருந்தமிழ் மொழியும் மிக்க உயர்நிலை பெற்று பொலிந்ததை விளக்குமென்றால் தமிழின் தொன்மை இவ்வளவென அறியற்பால தொன்றாமோ! தமிழ் என்னுஞ் சொல் பிற பாடையினின்று பிறந்ததாமெனக் கழறுவார்கூற்று அறிவுடையோரால் எட்டுணையும் விள்ளற் பால தன்று. தமிழென்பது தமிழ் மக்கள் தமது இனிய மொழிக்குத் தொன்று தொட்டு இட்டு வழங்குந் தூய தமிழ்ச் சொல்லென ஓர்க. தமிழின் தொன்மை அறிதற்கரிதாதல் பற்றியே நூல்கள் அதுபலடைப்புக் காலந்தொட்டு மேம்பட்டுவருகின்றதெனக் கூறும். யாமதன் பழமையைக்கண்டு கூறுதுமெனமுயன்று தம்மறிவிற்குத் தோன்றியவாறெல்லாங் கூறித் தமிழின் பழமைக்கு வரம்பு கட்டமுயல்வார் முயற்சி ஆர்கலியினாழமறிய வேண்டிச் சம்புவொன்று புல்லிய தன்வால் கொண்டு அளத்தலோடொக்கும். தமிழ்நாட்டின் பகுதியாகிய குமரி நாடு பண்டு சுமத்திரா யாவாத் தீவுகளை உள்ளடக்கி இந்து சமுத்திரத்துள் வெகுதூரம் பரந்திருந்ததென விளங்குகின்

றது. இதனுண்மையைப் "பாலி" யில்பாழான நிலையிற் காணப்படுங் கோயில்களு முணர்த்தும். மதுரா வென்று மோர் சிறுதீவும் சாவகத் தீவுக் கணித்தாகவுளது.

"கண்ணுதற் பெருங் கடவுளுங் கழகமோடமர்ந்து
பண்ணுறத் தெரிந்தாய்ந் தவிப்பசுந் தமிழேனை
மண்ணிடைச்சில விலக்கண வரம்பிலா மொழிபோல
எண்ணிடைப் படக்கிடந்ததா வெண்ணவும் படுமோ."

என்னும் ஆன்றோர் திருவாக்கு உபசாரமன்று, உண்மையே. ஆரிய மொழியையே புகழ்ந்து பேசிக்கொள்ளு மொருசாரார் தமிழ் மொழிக்குள்ள பெருஞ் சிறப்பினை அறியாமையினாலோ ஆரியத்தைத் தமிழுக்கு மேலாக வைக்க விழைகின்றமையாலோ அதனை இழித்துக்கூறுவர். ஆரியமே தெய்வமொழி என வாய்ப்பறைசாற்றித் திரிவோர் தமிழ் தெய்வ மொழியாதலுணருமாறு ஈண்டுச் சிறிது விளக்குதும். தலைச் சங்கத்தும் தமிழ்ப் புலவர்களாயிருந்து தமிழாராய்ந்தார் குமரவேள், திரிபுரமெரித்த விரிசடைக் கடவுள் முதலிய முதற் றெய்வங்களே. உலகியனிறுத்துப் பொருண் மரபொடுங்க-மாறனும் புலவருமயங்குறு காலை அன்பினைந்திணை என்பது முதலாய் அறுபது சூத்திரஞ் செய்தவர் தென்றமிழ்க் கடவுளாகிய சிவபெருமான் மிடியான் வருந்திய தருமியென்பார். பாண்டியன் சங்கமண்டபத்திற்றூக்கிய பொற்கிழி பெறுமாறு "கொங்குதேர் வாழ்க்கை"ச் செந்தமிழ்ப் பாடல் உதவிய வருமவரே.

"அடியார்க் கெளியன் சிற்றம்பலவன் கொற்றங்
குடியார்க் கெழுதிய கைச்சீட்டுப்—படியின் மிசைப்
பெற்றான் சாம்பானுக்குப் பேத மறத்தீக்கை செய்து
முத்தி கொடுக்க முறை"

என உமாபதியாருக்குத் திருமுகங் கட்டளை யிட்ட

அருமருந்தார் சேக்கிழார் முதலிய மெய்யடியார் பாடுவதற்கு அடி எடுத்துக் கொடுத்தவரும், மாணிக்கவாசகர் திருவாய்மலர்ந்தருளிய திருவாசகச் செந்தமிழ்ப் பாடல்களைச் செங்கையிலேடுவாங்கித் திருத்தமுற வரைந்தவரும் அம்பலக்கூத்துடையரே—தமிழிற் கனியுஞ் செந்தமிழ்த் தீஞ்சுவையைச் செவிமடுத்தற்கே முழுமுதல் சுந்தர பாண்டியனாயினு னென்றால் பின் தமிழின் பெருமையை என் சொல்வது! “தண்ணார் தமிழளிக்குந் தண் பாண்டி நாட்டானை” என்பது திருவாசகம். குமரவருள் பெற்றுக் கவிபாடிய அருணகிரி நாதர் “கொன்றைச் சடையார்க் கொன்றைத் தெரியக்-கொஞ்சித் தமிழாற் பகர்வோனே” என்றும், “அரிய தமிழ் தானளித்த மயில்வீரா” என்றும் புகல்வர். இத்துணை உரைத்தவை யெல்லாம் தமிழ்மொழியே தெய்வமொழி என்பதை அங்கை நெல்லிக்கனிபோற் றெள்ளிதினுணர்த்தும்.

தமிழ் மொழியில் இன்றுபோலன்றும் விழுமிய மந்திர மொழிகள் மிளிர்ந்திலங்கின. “நிறைமொழி மாந்தர் ஆணையிற் கிளந்த மறைமொழிதானே மந்திரமென்ப” என ஆசிரியர் தொல்காப்பியனார் மந்திர மொழியின் பண் புணர்த்துமாற்றானும் ‘மந்திரப் பொருள்வயினு அகுநவும்” “மறைமொழி கிளந்த மந்திரத்தான்” எனப்பிறண்டும் மந்திரங்களைப் பற்றி எடுத்து மொழிகின்றமை யானும் பண்டும் மந்திரங்கள் தமிழ் மொழி மாட்டு மலிந்து பொலிந்து விளங்கின வென்பது இனிது புலனாகும். பலகாரணச் செறிவாற் தமிழ் மொழியிற் றிகழ்ந்த அரிய நூல்களும் பிறவும் காந்தகன்ற பிற்காலத்து பண்டுசனற் குமாரர் முதலிய நால்வர்க்கு அறம் பொருளின்பம் வீடாய நான் மறைபுணர்த்தி வெளியிட்டாங்கு இறைவன் சமய குரவர் நால்வர் வாயிலாகத் தமிழ் மாமறைகளை வெளிவரச் செய்தனர். இவை ஒப்புயர்வில்லாத் தமிழ் மந்திரங்கள். திருமுறையிலுள்ள

பிறவும் மந்திரங்களாகவே போற்றிக் காப்பாற்றப்படுகின்றன. பதிவாக்காகிய தமிழ் மந்திரங்கள் பசுவாக்கிய ஆரியமந்திரங்களினும் சாலச்சிறந்தன. பதிவாக்காகிய வேதங்கள் தமிழில் உள்ளன என்பதை "வினையின்நீங்கி விளங்கிய அறிவின்—முனைவன் கண்டது முதனூலாகும்" என்னுந்தொல்காப்பியச் சூத்திரமும், "வேதமொடாகமம் மெய்யாமிறைவனூல—லோதும் பொதுவுஞ் சிறப்புமென்றுள்ளன"-என்னும் திருமூலர் திருவாக்கு முணர்த்தும். இன்னும்

" மாறான கன்னி குமரியே காவிரி
வேறா நவதீர்த்தமிக் குள்ள வெற்பேழுட்
பேறான வேதாகமமே பிறத்தலான
மாறான தென்திசை வையகஞ் சுத்தமே "

" தமிழ் மண்டலமைந்துந் தாவிய ஞான "
முமிழ்வதுபோல வுலகந்திரிவ
ரவிழுமனமு மெம்மாதி யறிவுந்
தமிழ் மண்டலமைந்துந் தத்துவமாமே "

" சதாசிவந்தத்துவ முத்தமிழ் வேதம் "

" தங்கிமிளா மைவைத்தான் தமிழ்ச் சாத்திரம்".

என்னுந் திருமந்திரங்கள் வேதாகமங்கட்குப் பிறப்பிடம் தென்திசை யென்றும் அவை தமிழிலுள்ளனவென்றும் கனிவிளக்கும். அரியவேதங்கள் பல்வேறு முனிவர்களாற் பல காலந்துப் பாடப்பட்டனவா யிருத்தலானும் அவை கொலை வேள்வி முதலியவற்றை வற்புறுத்துவதுடன் சிறு தெய்வங்கட்கெல்லாந் துதி கூறுகின்றமையானும் தமிழ் மறை விளக்குமாறு அவை சனற்குமாரர் நால்வரால் வெளிவந்தனவென பெறப்படாமையானும் முன்மூன்றென்

னும் வழக்கிலிருந்து பின் நான்காயினமையானும் அவை (ஆரிய வேதங்கள்) கடவுளாலருளிய மறைகளன் றென்பது பட்டப்பகல். (தொடரும்)

இங்ஙனம்.

ந. சி. கந்தையா, கந்தரோடை.

---

(வண்ணை நகர் ஸ்ரீ க. வைத்தியலிங்க பிள்ளை எழுதியது.)

## நமது தாய்ப்பாஷையாகிய தமிழை அவமதித்தல்.

தாயை யிகழுந் தனயரைப்போல
எங்கள் சாதியந்தார்க் கின்றியமையாத்
தாய்ப் பாஷையாகிய தமிழினை யிகழ்ந்து
விளம்பிடத்தானும் வெட்க மடைந்தும்
பண்புடைய முயர் தமிழ்ப் புதின பத்திரங்களை
வாசிப்பதற்கு மனமரு வருந்தும்
புகலுமாங்கிலபுதி னப்பத்திரிகையை
வாசிந் துணர மாட்டாதவர்களும்
அக்குளிலிடுக்கி யலமந் துழலும்
நண்பரேயொன்று நவிலுவன் கேண்மின்!
செந்தமிழ் தெய்வித பாஷையென்பதற்கு
அம்பிகைசமேத ஆலவாயிறையும்
குறைத்தடித்த வீரவேற்கரனும்
முதலிடைகடையெனு முச்சங்கத்தினுந்
தலைமைப்புலவராய்த் தாமிருந்தருளி
ஆராய்ந்ததுவே யமைந்தசான்றாகும்
இன்னுமித்தமிழின பெருமையை யெடுத்துக்
கழறுவன் மிகவுங் கவனமாய்க் கேண்மின்!

மாதவரேத்தும் மதிமிளிர்சடையனைத்
தோகைதன் மனைக்குத் தூதுவிடுத்ததும்
ஆரணம்பண்டு அடைத்த கபாடந்
திறக்கவும் பூட்டவுஞ் செய்ததும் அழலால்
வெந்த எலும்பை மேதினி துதிக்கப்
பெண்ணாக்கியதும் பிராமணச் சிறுவனை
இடங்கரின்வாயி லிருந்துமீட்டதும்
சர்ப்பந்தீண்டி யிறந்த தநயனை
உடனிருந்தன்ன முண்ணச் செய்ததும்
ஆலந்தன்னை அமிர்தம் ஆக்கியதும்
காசினிமீது கயிலை காட்டியதும்
கருங்கலோடமாய்க் கரைசேர் வித்ததும்
புகலுநீற்றறை பொய்கை யாக்கியதும்
கூடற்கோமான் கூனையுங் கூனையும்
போக்கியவனைப் புரந்ததுமாற்றில்
இட்ட ஏடதனை எதிரேற்றியதும்
எரியினிலிட்ட ஏடுவேகாமல்
பச்சையாயெடுத்ததும் பாருளோர்காண
ஆற்றினிலிட்ட திரவியமதனைக்
குளத்தினிலெடுத்துக் கொண்டதுமரவால்
இறந்த செட்டியை எழுப்பிக் கொடுத்ததும்
மூங்கைப்பெண்ணை மொழிவித்திட்டதும்
அயன்மாலறியா அம்பிகைபாகனை
மண்சுமந்தடிபட வைத்ததுஞ் சிறந்த
மன்றலைக்காண வந்தவர் தமக்குக்
கோதிலாமுத்தி கொடுத்ததுமெவருஞ்
செப்புதற்கரியவிச் செந்தமிழன்றோ?
தரைதனின்மகவாய்த் தவழ்ந்தபோதெமக்கு

தாய்மார்பயிற்றித் தந்த நந்தமிழே !
நித்திரையின்றிரா பழுதகோத்தில்
காலாட்டியாதுந் தமிழ்பாடினீரே ?
மாதாப்பிதாக்கள் மகிழ்ந்திட நாங்கள்
சாற்றியமழலை மொழிதமிழன்றோ ?
பசியினலன்னை யிடந்திற்பாலனைப்
நாமெவணக்கேட்டு உண்டதுந்தமிழே !
இன்னமநேகம் பெருமைகளமைந்த
தமது செந்தமிழை நன்றிகெட்டவர்போல்
அந்நியபாஷையாம் ஆங்கிலந்தன்னை
சேவகாவிருந்தி செய்வதற்காக
உடையுணவுந்தந்து மொழிக்கு வெள்ளையரைப்
போலவேயெழுதில் புனிதமிலலோராய்க்
கெட்டதேயன்றிக் கீர்த்தி பெற்றிலருந்
தாய்ப்பாஷையான தமிழைமறந்து
மன்னவரும் ஆங்கிலம் பேசுதன்மையோ ?
ஒருநாள்வரியும் வளர்ந்திடவுலகில்
ஆங்கிலர்க்கடிமைக ளாகிடலாமோ ?
சிங்களர் அருக்கர் தெலுங்கர் ஆங்கிலர்
ஆதியோர் தமது அரியபாஷைகளை
உத்தியோகத்தா லொழித்து விட்டனரோ ?
அவர்கட்குள்ள பாஷாபிமானம்
உங்கட்கில்லா தொழிந்ததுமென்னே ?
தாயைமறந்த சேயர்போல் நீவிர்
வெட்கமென்பதனை விற்றுவிட்டீரோ !
தமிழ்ப்பாஷையை நீர் அலட்சியஞ் செய்தலால
ஓது செந்தமிழில் ஒருவரியாயினும்
எழுதமுடியா திடர்ப்படுகின்றீர் !
உங்களில் அநேகர் ஒப்புயர்வில்லாத்

தமிழைப்பேசினும் பறங்கித் தமிழ்போல்
"நான் தெரியாது" என்று நவிலுவீர் !
சீச்சீ ! உங்கள் செய்கைதானென்னே ?
பண்புள தமது சாதிப்பாஷையில்
அன்பிலா உம்மை அந்நியசாதியார்
நாணிலரென்று நகைபாடார்களோ ?
தமிழை நீர்கற்கத் தவறியதாலே
அந்தோ ! சமய உணர்ச்சியற்றவராய்ப்
புறச்சமயத்தவர் பொறித்த கேள்விகட்கு
விடைசொலமாட்டா தாங்கைதபோல் விழிக்கிறீர்
ஆதலால் யானொன் றறைகுவன் கேண்மின்
உத்தியோகம்பார்த் தொழிந்தமனைக்கு
வந்தபின்னிரவில் மதியுள சிலபேர்
சேர்ந்தொரு கழகஞ் செப்பமாயமைத்து
பலகலைதெரிந்த பண்டிதரொருவரை
ஆசாரியனாய் அமைத்தவரிடத்தில்
மாயாவாத நூல்களைமாற்றி
ஔவையாரியற்றிய அரிய நூல்அறிவை
விளக்கிடுந் திருக்குறள் மெய்கண்ட சாத்திரம்
நாவலர் நவின்ற நல்லருட்பாக்கள்
தாயுமானவர் சாற்றிய நூலொடு
திருமந்திரமெனுந் திருமூலர்வாக்கு
ஆகியபதிநூ லனைத்தையுமையக்
திரிபறக்கற்றுச் சிவனேபதியெனச்
சிந்தையிற்றெளிந்து சிறுதெய்வங்களை
வணங்காதான்றன் மலரடியிறைஞ்சிப்
பிறவாச்சிவகதி பெற்றுவாழ்குதிரே.

இ. சா.

---

# ஒளவைப் பாட்டின் அருமை.

---

இக்கரைக் கக்கரைப் பச்சை—காட்சியைக் கவர்வது சேய்மை என்பர். கிட்ட விருப்பது கீழ்மை யென்றும் எட்ட விருப்பது ஏற்றமென்றும் கொள்வர் மனிதர். தமிழ்மக்களினும் ஆரியப் பிராமணர்களே அருமையும் பெருமையும் வாய்ந்தவர்களென ஆதிகாலத்தி லெண்ணப்பட்டனரன்றோ! நாளைக்கும் சகல வளங்களும் நிறைந்த நம்மிந்திய தேசமிருக்க சோற்றுக்கு வழியில்லாத ஆங்கில நாட்டையன்றோ சீர்மை யென்று செப்புகின்றனர். ஷேக்ஸ்பியர் நாடகங்களையே யன்றி ஜீவக சிந்தாமணியை மெச்சுகின்றவர் சிலரே. இஃது இவ்வாறாகத் தமிழ் மக்களநேகர் திருக்குறள் முதலிய பெரிய நூற்களையே மேம்படுத்திப் பேசுவார்களை யொழிய ஆத்திசூடி போன்ற அருமைச் சிறுநூற்களை ஆராய்ந்து பாரார். நூற்களை முறையாகப் படித்துக் கேட்கும் பழக்கம் அடியோடு அற்றுப்போய் விட்டது. மாணவர் ஆடெருமை போன்று அங்கொன்று மிங்கொன்று மாகவும், பிஞ்சிற் பழுத்தகேள்விகள் கேட்டு ஆசிரியரை வெறுக்கச் செய்தும் கல்வி பயில்கின்றனர். மேலும் ஏடெழுத்தாணி யெடுத்தறியாதவர்களும் எழுத்து வாசனை நிரம்பப் பெறாதவர்களும் கிராமப் பாடசாலைகளில் உபாத்தியாயர்களாக ஏற்படுத்தப் படுகின்றனர். அன்னோரில் ஒருவர் "ஊக்கமது கைவிடேல்" என்றும், "ஒளவியம் பேசுதல் ஆக்கத்திற் கழகு" என்றும் அறியாப் பிள்ளைகட்குச் சொல்லிக் கொடுக்கக் கேட்டு விசன முற்றிருக்கின்றேன். இத்தகையோரிடம் பிள்ளைகள் எஃதகைய கல்விப்

பயிற்சியடைந்து ஈடேறுவார்கள் என்பது விளங்கவில்லை. ஆகையின் நண்பர்காள்! சிறுநூற்களைச் சிறுமைப் படுத்தாதீர்கள்; உருவு கண்டெள்ளாதீர்கள். சிறு குடியிலன்றோ பெரியோர்கள் பிறக்கக் காண்கின்றோம். இதற்குக் காட்டாக ஔவையார் இயற்றியருளியுள்ள "ஆத்திசூடியின் கண் காணப்படும்" அரும்பெறற் கருத்துக்களிற் சிற்சிலவற்றை இங்குக் கண்டறிவாம்.

அறஞ் செய விரும்பு—இதன் பொருள் ஆன்றோரான் விதித்தன செய்தலும் விலக்கியன செய்யா தொழிதலுமாம். இது கடமை யென்னுமொரு மொழியிலடங்கும். 'சிறப்புடை மரபிற் பொருளு மின்பமும் அறத்து வழிப் படூஉம்', என்றும், 'அறத்தி னூஉங்காக்கமுமில்லை', என்றும், 'அறத்தான் வருவதே இன்பம், மற்றெல்லாம் புறத்த', என்றும் எடுத்துக் காட்டி, அதனை, 'செல்லும் வாயெல்லாஞ் செயல்', என்றும், 'அன்றறிவா மென்னா தறஞ் செய்க', என்றும், 'வீழ்நாள் படாமை நன்றாற்று', என்றும் அறிக்கையிட்டனர் ஆன்றோர். அத்தகையனவாய கடமைகளின் தொகுதியைச் சுருக்கச் சொல்லி விளக்க வைப்பான் தொடங்கி முதற்கண் முகவுரையாக எவனும் தன் கடமைகளைச் செய்வதில் ஆர்வமும் அவாவுமுடையனாகவேண்டு மென்பார் 'அறஞ்செய விரும்பு' என்றார். என்னை, ஒரு வினையாளன் அவ்வினையின் கண் அவாவுடையனாயினன்றோ அதனைக் கடைபோகச் செய்ய ஊக்கமும் வல்லமையு மெய்தப்பெறுவன்? மேல் விரித்துக் காட்டும் கடமைகட்கெல்லாம் இவ்வாக்கியம் அடிப்படையாமென்க. இவ்வறம் பொன்றுங்காற் பொன்றாத் துணையாதலானும், அதனை மறத்தலின் வேறு கேடொன்றில்லை யாதலானும், அதுவே வாழ்நாள் வழியடைக்கும் கல்லாதலானும், அதனை விட்டொழித்தவழிக் கிட்டுவது பழியே யாதலானும் அவ்

டுமென்றும்—ஆகிய இக்கருத்துக்களை உலகினர் உள்ளத்தில் பதிய வைக்கவே சினத்தை எல்லைப்படுத்தி 'ஒழிவது சினம்' என்றும் 'ஆறுவது சினம்' என அனுபவத்தையொட்டி வெகு அழகாய் அமைத்து வைத்தனர் நமதௌவைப் பிராட்டியார்.

ஏற்பதிகழ்ச்சி, ஐயமிட்டுண் ஏற்பதிகழ்ச்சியாயின் ஐயமிட்டுண்ணுமா றெங்ஙன் என்பர் சிலர். அவர் தம் கொள்கை யாதெனின் முன்னையதை யுணர்ந்து பிச்சையெடுப்பாரிலராக பின்னையதை யுணர்ந்தவர் அதனை நிறைவேற்றி வைப்பது எவ்வாறு கூடுமென்பதே. முன்னோர்கள் கட்டுரைத்த நீதிகளியாவும் ஒருவனுக்கே யென்பதின்று. நின்றுயிருந்த கேட்டதைத் திக்கற்றவர்க்குக் கொடுவென்றால், அது பணத்தைப் புதைத்துப் பாழாக்குபவர்க்குப் படுமோ? அலது அன்றாடங் காய்ச்சிக் குடிப்பவர்க்கடுக்குமோ? 'நோன்பென்பது கொன்று தின்னாமை' என்பது கொல்லான் புலாலை மறுத்தவனுக்குச் சொல்லியதாமோ? அங்ஙனமே 'ஏற்பதிகழ்ச்சி' எனச் சோம்பித்திரிபவர்க்கும், ஐயமிட்டுண் என எச்சைக்கையால் காக்கையோட்டாதவர்க்கும் எடுத்துக்கூறியதாமெனவறிக. மேலும் முன்னையது முடங்குருடர்களுக்கும், பின்னையது, பாத்துண்ணும் பான்மை யமைந்து கிடப்பவர்க்கும் பொருந்தாவாம்.

ஙப்போல் வளை—இங்கு நமது பாட்டியின் பாட்டிற் கண்ட உபமானத்தை உய்த்துணருங்கள். நெடுங்கணக்கு ஙகர வரிசையில் அங்ஙகரம் ஒன்றுதானே மற்ற எழுத்துக்களுடன் கூடி மொழிகளில் பயின்று வருகின்றது. ஆயினும் அது அன்னை அயல் வீட்டாரைப் போன்று தன் சுற்றத்தோடு கூடி வாழவும், அவர் தம் எளனத்திற்கு ஆளாகாமலிருக்கவுமெண்ணி, பயனற்றவர்களாக விருந்தாங் தன் தன்

சுற்றத்தார்களாய ஆ, வி, முதலிய பதினெழுத்துக்களை யும் உடன் சேர்த்து வைத்துக்கொண்டு ஒரு குடும்ப மாக கூடிவாழ்கின்றதென்று முடிபமானத்தான் மனிதர் தஞ்சுற்றத்தவர்களை உதவியற்றவரென்றும் குற்றம் பாராது உடன்கூட்டி வைத்துக்கொண்டு உயிர் வாழ்வதே உயர்வெனக் காட்டிப் பின் கொன்றை வேந்தனில், 'குற் றம் பார்க்கில் சுற்றமில்லை', என்றிதற்கோர் வழியு மருளிப் போந் தவ்வையைத் தேருங்கால் நமதுள்ளத்தின் கண் உவகை பொங்கி வழிகின்றதன்றோ!

திருமாலுக் கடிமைசெய்—திருமால் உலகத்திற்கு காத்தற் கடவுள்; அவன் மனைவி இலட்சுமி; அவள் செல்வ மளிப்பவள்; அச்செல்வம் இல்வாழ்வானுக்கு இன்றியமையாதது. ஆகையின் அவனே அத்திருமா லுக்கு அடிமை செய்யவேண்டியவன். ஏனைய துறவறத் தானுக்குச் செல்வம் தீயது; இல்லற வாழ்க்கை அவனுக் கில்லை. ஆகையின் அவனே தவத்தையே விரும்பியவ னவன். அவன் திரிபுரமெரித்த விரிசடைக் கடவுளுக்கே அடிமை யென்பதைக் கொன்றை வேந்தனில், 'சிவத்தைப் பேணிற் றவத்திற் கழகு' என்னும் அமுத வாக்கினால் அறி வித்துத் தமது இவைபற்றையும் உலகத்துக்குச் சுட்டிக் காட்டிப் போந்தார்.

ஊருடன் கூடிவாழ்—இதனால் மனிதர்களுக்கு ஒற் றுமை வேண்டுமென்பதைத் தெரிவித்து இவ்வொற்றுமை சிறந்து செல்வதற்குரிய தென்பதை வற்புறுத்திக் காட்டி இந்நூலின் கண்ணே, 'நாடொப்பன செய்', 'தேசத்தோ டொத்துவாழ்', என்று முக்காலுஞ் சொல்லி, பின்னும் கொன்றை வேந்தனில் 'ஊருடன் பகைக்கின் வேருடன் கெடும்', 'நாடெங்கும் வாழக் கேடொன்றுமில்லை' என்று மெடுத்தோதி மாந்தர்க்கு தேசாபிமானம் சாலச் சிறப்புத்

தரும் என்பதை வெகு அருமையாய் அவர் தம் மனத்திற் பட்டுப் பயன்படுமாறருளினர்.

தையல் சொற்கேளேல்—இவ்வாக்கியம் மேனாட்டு நாகரீகத்தை மிகச் சிறப்பாக மெச்சி, 'நாக்கடிப்பாகவும் வாய்ப்பறையாகவும் சாற்றிக்கொண்டு திரியும் மேதாவி கட்கு இரும்பு நிகழைக்கின்றது. பெண் பாலராகிய ஔவை யாரே இவ்வாக்கியத்தைச் சின்னஞ்சிறு வயதிலேயே சிறார்கள் மனத்திற் பதியவைக்க வேண்டுமென்று எண்ணங் கொண்டதை யாமெண்ணிப் பார்த்து அவர் தம் ஆழ்ந்த கருத்தின தன்மையைச் சற்று ஆராய்ந்தறிய வேண்டாவோ? நமது பாட்டியார் நாட்டி வைத்ததை ஓட்டிவிட நாட்டங் கொண்டிருக்கும் நமது நாட்டாருக் குத் தாட்டியாய்க் காட்ட வேண்டியதொன்றுண்டு; தையல் என்னுஞ் சொல் பதினாறுட்டைப் பருவத்துக்குரிய பெண் ணைக் குறிக்கும். அவளே புது மணம் பெற்றுப் புருஷன் வீடடைந்தவள். அத்தருவாயில் அவளுக்குச் சுயபுத்தியும் மனையறத்தில் அனுபவங்களும் மட்டுத்தானே. அவளைக் கட்டிக்கொண்ட தாய் தகப்பன் கீழடங்கிய மணப்பிள்ளை யானவன் அவள் சொல்வழி நிற்கவேண்டுவ தென்பது அடுக்குமோ! அவ்வாறு கேட்டு நம் கண் முன்னேயே எத்தனை அறியாப் பிள்ளைகள் அன்னை பிதாக்களையும் அண் ணன் தம்பிமார்களையும் விட்டகன்று அல்லற்பட்டு இன் னும் அழுதுகொண் டிருக்கின்றனர்! அவ்வாறன்றி அத் தையல் ஆண் பெண்களைப் பெற்று, அறமனையில் ஆழ்ந்த அனுபவமுற்று, அசூயை முதலிய துர்க்குணங்கள் அற்று சற்றுப. கணவன் மனங்கோணாது சமுசாரத்தை நடத்தி வருங்கால், கொண்டான் பெண்டாட்டியின் பேச்சை கேளாதிருக்க நேருமோ? அக்காலத்தில் அவன் அவ்வீட லத்துக்கு இல்லாளாகிய எஜமாட்டியாவதொன்றோ, தெய

வழுமாவனன்றோ! இஃதறிந்தன்றோ, 'சான்றோரின் என்ன கடவுளுமில்!', எனப்பணித்தார் பெரியார். இத்தன்மையைத் தெளிகிலாதியாத நவீன நாகரீகப் பேய்பிடித்த நம்மவரிற் சிலர் இவ்வாக்கியத்தின் போக்கைத் தூக்கிப் பாராது தமதான்றோரின் ஆன்றமதி நுட்பத்துக்கும், அந்நாளைய மேனாட்டினும் மேம்பட்டிருந்த நமது இந்திய நாட்டின் சொந்த நாகரீகத்துக்கும் ஒரு சொட்டைச் சிரிப்புச் சிரித்து வைத்துவிட்டு அயற்சட்டைபிடித்துச் சட்டவட்டமாய்த் தருக்கித் திரிவது எத்தனை மானக்கேடென்பதை நந்தமிழ்நாடு நன்குணருமாக.

நமது 'அருட்செல்வத்'தினிடம் அன்பு கொண்ட அன்பர்காள்! அடியேன் சிற்றறிவிற் கெட்டியமட்டில் கீழ்க் காட்டியவாறே ஒளவைப்பாட்டியின் 'ஆத்திசூடி'யிற் கண்ட அரிய வாக்கியங்களின் உட்கருத்துக்களை உய்த்துணர்வீர்களாக. மறுதிங்களில் வெளிவரும் 'அருட்செல்வத்'தின் வாயிலாய் 'கொன்றை வேந்தன்' வாக்கியங்களிற் சிலவற்றையும் ஆராய்ந்தெழுத எண்ணியிருக்கின்றேன்.

சே. சகாதேவ முதலியார்
தமிழ்ப் புலவர்.

---

## குடியைப்பற்றிய குறிப்புகள்

ஜெர்மனியில் சாராயக்கடை வியாபாரிகள் பதினாறு வயதுக் குட்பட்டவர்களுக்கும், போலீஸாருக்கும் குடி வெறியன் என்று தெரியப்பட்டவர்களுக்கும் சாராய விற்பனை செய்யக்கூடாதென்று கண்டிப்பான உத்தரவு பிறந்திருக்கிறது.

1894-ம் வருஷம் முதல் 1900-ம் வருஷம் வரையில் சாராயக் கடைக்காரர்களால் இந்திய கவர்ன்மெண்டாருக்குச் செலுத்தப்பட்டிருக்கிற வரி ரூபா 36,50,40000 ஆகிறது. அப்படியானால் சாராயம் எவ்வளவு ரூபாய்க்கு விற்பனையாயிருந்திருக்கவேண்டும்.

* * * *

ஐக்கிய மாகாணத்தில் மதுவென்னும் விஷத்தை விற்பனை செய்யும்பொருட்டு நியூயார்க் பட்டணத்திலிருந்து சிக்காக்கோ பட்டணம் வரைக்கும் 250000 கடைகள் ஸ்தாபிக்கப்பட்டிருக்கின்றன. இதைவேண்டி அக்குடிகள் வருஷா வருஷம் 140000000 பவுன் செலவழிக்கிறார்கள்.

* * * *

1900-ம் வருஷத்தில் வெளியான கணக்குப்படி சென்னை வைத்தியக்கார ஆஸ்பத்திரியிலுள்ள வைத்தியக்காரர்களின் மொத்தத் தொகை 728. இவர்களில் கள், சாராயம், கஞ்சா, அபின் முதலான லாகிரி வஸ்துக்களை உபயோகித்ததினா லுண்டான வைத்தியக்காரர்கள் 73 பெயர்களென்று குறிக்கப்பட்டிருக்கிறது.

* * * *

ருஷியாவின் தலை நகராகிய செண்ட் பீட்டர்ஸ்பர்க்கின் கவர்னர் குடித்து வெறிக்கிற ஒவ்வொருவன் பெயரையும் கடுதாசியிலெழுதித் தெருவெல்லாம் ஒட்டிவைக்கிறதுமல்லாமல் கெஜட் பத்திரிகைகளில் பிரசுரம் செய்து வருகிறார். அதனால் குடியரெல்லாம் வெட்கமும் பயமுமுற்றுக் கிடக்கிறார்களாம்.

* * * *

இங்கிலாந்திலுள்ள மதுவிலக்குச் சங்கத்தார் ஞாயிற்றுக்கிழமைகளில் இங்கிலாந்து தேசம் முழுவதும் சாராயக்

கடைகளை அடைத்து வைக்கக் கவர்ன்மெண்டார் ஒரு சட்டம் ஏற்படுத்த வேண்டுமென்று பிரயாசைப்படுகிறார்கள். இப்படிப்பட்ட சட்டம் ஸ்காட்லாண்டில் கடந்த 40 வருஷங்களாயிருந்து வந்திருக்கிறது.

* * * *

15 வயதுக்குட்பட்டவர்களுக்கு மதுபானம் விற்காதபடிக்குக் கவர்ன்மெண்டார் ஒழுங்கு செய்யப்படாதா என்று சட்ட நிரூபண சபையில் கேட்டதற்கு, இந்தத் தேசத்தில் தங்கள் வயதைச் சொல்லக்கூடியவர்கள் சொற்ப பேர்களானபடியால் இப்படிப்பட்ட ஒழுங்கு செய்வது கூடாத காரியமென்று பதில் சொல்லப்பட்டது.

* * * *

1897 98-வருஷங்களில் ஜெர்மனி தேசத்தில் செலவான பீர் சாராயம் 1383700000 கலன்கள். கிரேட்பிரிட்டனில் இத்தொகையைவிட அதிகமாம். ஆளொன்றுக்குச் சராசரி தொகை கிரேட் பிரிட்டனில் 32 கலன். ஜெர்மனியில் 25 கலன், யுனைடெட்ஸ்டேட்ஸில் 10 கலன், பீர் முதலிய சாராயங்கள் வேண்டியதவசியமாம்.

* * * *

சீமையில் ஒருவன் தன் மனைவியை 6 மாதம் சிறையில் வைத்த நியாயாதிபதிக்குத் தன் நன்றியறிதலைக் காட்டவேண்டி ஓர் கடிதம் எழுதினான். அதில், 'ஐயா— நீர் என் மனைவி குடித்து நிலை குலைந்ததற்காகப் பலமுறை அபராத தண்டனை விதித்தீர். அவள் திருந்தவில்லை. கடைசியாக 6-மாதம் கடுஞ்சிறையில் வைத்ததால் குடியை விட்டுவிட்டாள்! இப்போது நல்ல நடத்தையுடனிருக்கிறாள். இதற்காக என்னுடைய வந்தனத்தை ஏற்றுக் கொள்ளக் கோருகிறேன்' என்று எழுதப்பட்டிருந்தது.

---

PRINTED AT THE B. N. PRESS MOUNT ROAD, MADRAS.

உலகுக்கு ஒக்குமாவாம்! என் ஒக்காமம்போகும் பொக்குவாய்க் கிழவிக்கு உப்புமா ஒக்குமா விக்குமா என்று கேட்டதுபோ லிருக்கிறதே. பெரியவர்கள் அதெல்லாம் யோசித்துத்தான் ஒரு முடிவு செய்திருப்பார்கள். சும்மா வாயை மூடிக்கொண்டு உம்மை எதற்காக வரவழைத்திருக்கிறதோ அதைப்பாரும்."

வேங்கடவாண ஐயர் :—"விகடரே! வாத்தியார் சொன்னதிலென்ன குற்றமிருக்கிறது? ஒருவன் நல்லதல்லாத ஒருகாரியத்தைச் செய்யப்புகின், அது கெட்டதென்று தெரிந்த ஒருவன், அதை அவனுக்குக் காட்டாவிடின், எடுத்துக் காட்டாதவனே அதன் பாவத்திற்கு உடையவனாகிறான். அதுபோல், அவர் எடுத்துக் காட்டக் கடமைப்பட்டவரே."

விகடன் :—"அட வேலையற்றவரே! உங்களுக்கெல்லாம் உதாரணம் குட்டிச்சுவரே. உங்கள் மூளையெல்லாம் உவரே. நீங்களெல்லாம் நெல்லிலுட் பிறந்த பதரே. 'ஆபத்துக்குப் பாவமில்லை' யென்று அந்த தர்ம சாஸ்திரம் சொல்லவில்லையோ? அதோ அந்தக் கதவு திறக்கப்படும் ஓசைகேட்கிறது. மஹாராஜா வரப்போகிறார்கள். 'மூச்' என்ற சப்தம்கூட வெளியே கேட்கக்கூடாது. சப்தம் போட்டீர்களோ : தூக்கி நிலத்தி லறைந்துவிடுவேன்."

மஹாராஜாவும் வித்தியா சாகரரும் மண்டபத்திற்குள் வந்தார்கள். உடனே எல்லோரும் எழுந்து வணங்க, அரசர் பெருமான், அவர்களை அமரச் சொல்லித் தானும் அமர்ந்தார்.

மஹாராஜா :—"சாஸ்திரிகாள்! நான் உங்களை

அழைத்த காரணம் உங்கள் யாவர்க்கும் தெரியுமல்லவா ?"

சிலர் :—" ஆமாம், மஹாராஜ் !"

மஹாராஜா :—' இனி, மேல் நடக்கவேண்டிய காரியங்களைப் பார்க்கலாமே. ஜாதகங்கள் பொருத்தம் எப்படி ?"

வேறு சிலர் :—" மஹாராஜா ! நாங்கள் இக்கலியாணத்தைப்பற்றிச் சில சங்கதிகள் சொல்லவேண்டியதிருக்கின்றன. சொல்ல உத்தரவானால் சொல்லுகிறோம்."

மஹாராஜா :—" எவ்வித தடையுமின்றிச் சொல்லலாம்."

ஸ்ரீயாசாமி ஐயர் :—" மஹாராஜா ! எவியும் வெள்ளெலியும் நிறத்தைத் தவிர உருவத்திலொன்றா யிருந்தாலும், ஒன்று மற்றொன்றாகாது. அண்டங்காக்கையும் காக்கையும், பலவற்றிலும் ஒரே மாதிரியா யிருந்தாலும் ஒன்றாகுமா ? மாடப்புறா மணிப் புறாவாகுமா? மணிப் புறாவிற்கும் தவிட்டுப் புறாவிற்கும் பொருந்துமா? அதுபோல் எவ்வளவு சொத்து, பணம், அழகு, அந்தஸ்து முதலியவை இருந்தாலும் வைஸியர், க்ஷத்திரிய ராகமாட்டார். இவ்வித விவாகம் விவாதமா யிருக்கிறதேயன்றி வேறெனக் கொன்றும் தெரியவில்லை. எங்களைவிட தங்களுக்கு இவை யெல்லாம் நன்றாய்த் தெரிந்ததே. எனினும் எங்களுக்குத் திருப்தியில்லாதவற்றை, சமயத்தில் எடுத்துச் சொல்லவேண்டியது எங்கள் கடமை. சாஸ்திரங்கள் இவ்வித விவாகத்தை ஒப்புக்கொள்ளாததுடன்

அநஷ்டானத்திலும் இவ்வித வழக்கமில்லை. தாங்கள் இதைக் கவனிக்கவேண்டும்."

விகடன் :- "மஹாராஜா! இங்கு வந்திருக்கும் சாஸ்திரிகளுக்குள் இரண்டுவித அபிப்பிராயங்களிருக்கின்றன. ஐயாசாமி வாத்தியாரின் கக்ஷியைச் சேர்ந்தவர்களுக்கு சாதாரண உதாரணங்கள் போதுமானதாயிருக்குமென்று என்னால் நினைக்க முடியவில்லை. ஆகையினால் இரு கக்ஷியார்களுக்குள்ளேயும் சாஸ்திரோக்தமான தர்க்கங்களைச் செய்தால், 'பொருத்தமான விவாகந்தான்' என்று அவர்கள் தங்கள் வாயினாலேயே சொல்லுவார்கள். இக்கலியாணமோ எப்படியும் முடியப்போகிறது. இதற்கிடையில் சிலர் மனது அதிருப்தியுடனிருக்க ஏழையின் மனதிற்குச் சரியாயில்லை. சாஸ்திர தர்க்கங்களினாலேயே ஐயாசாமி வாத்தியார் கக்ஷிக்காரர்கள் தங்கள் பெருமை நீக்கும்படி செய்யவேண்டும். தங்களிஷ்டப்படி செய்கிறோம்."

மஹாராஜா :—"விகடன் சொல்லுவது ஒரு விதத்திற்கு சரியானதேயாயினும், இவர்களுக்குள் சண்டை மூட்டிவிடவே இவ்வித யோசனைகளெல்லாம் பலமாகப் போட்டிருப்பான்; ஆகையினால் வித்தியாசாகரரே! சாஸ்திர தர்க்கங்கள் நடக்கும்பொழுது நீரும் அவர்களுடனிருந்து விபரீதங்களுக்கு இடமில்லாமற் பார்த்துக்கொள்ளும்."

என்றெழுந்து அரண்மனையுட் சென்றார்.

விகடன் :—"ஏய் நாணு! இனிக் கதையை ஆரம்பிக்கவேண்டியதே. இந்த இழவெடுத்தவன்

மஹாராஜா விடத்தில்கூடச் சொல்லிவிட்டான். சாஸ்திர முட்டைகளைக் கிளப்புங்கள்.

ஐயாசாமி ஐயர் :—“ ஓய் விகடரே! அசடம்* பண்ணுவதே உம்வேலையாயிருக்கிறது. எதற்கு ஓய் தர்க்கம்? இது சரியானதல்லவென்றால், தர்க்கம் செய்ய வேண்டுமென்று சந்திக்கிழுக்கிறீரே.”

விகடன் :—“ உமக்கு, தர்க்கித்து நியாயம் சொல்ல வழியில்லாவிட்டால் வழக்கமென்றும் சரியானதல்லவென்றும் மாரடியும்.”

ஐயாசாமி ஐயர் :—“ அட போங்காணும்! எல்லாம் உமக்குத் தான் தெரியும் போலிருக்கிறது! பராசர ஸ்மிருதியில் இதைப்பற்றி உத்தரவு கொடுத்திருக்கிறதா?”

சேஷையர் :- “ மநுதர்ம சாஸ்திரம் உத்தரவு கொடுக்கவில்லையா? மநுதர்ம சாஸ்திரத்தைத்தானே முக்கியமாய் நாம் கொள்ளவேண்டுமென எத்தனை சாஸ்திரங்கள் சொல்லுகின்றன!”

ஐயாசாமி ஐயர் :—“ மநுதர்ம சாஸ்திரம்தான் மேலென்றீர். தர்ம சாஸ்திரம் பதினெட்டு. அவற்றுள்........”

விகடன் :—“ பதினேழுக்குப் பின்வரும் பதினெட்டா? அல்லது பத்தொன்பதுக்கு முன்வரும் பதினெட்டா?”

ஐயாசாமி ஐயர் :—“ இரண்டும்தான். அவற்றுள், கிரேதா யுகத்தில் மநுஸ்மிருதியும், திரேதா யுகத்தில் கௌதமஸ்மிருதியும், த்வாபர யுகத்தில் சங்

* அசடம் = பொல்லாங்கு.

கிலித ஸ்மிருதியும், இக்கலியுகத்தில் பராசர ஸ்மிருதியும் முக்கியமாயிருக்குமென்று கூறப்பட்டிருக்கிறது. உமக்குப் பிரியமுள்ள மநுஸ்மிருதியில், ஜாதி வித்தியாசம் வேண்டாமென்று சொல்லியிருக்கிறது? மநுஸ்மிருதியிலும், தன் ஜாதியில் ஒருபெண்ணை மணந்த பின்னர், இஷ்டமிருந்தால் தனக்குக் கீழ்ப்பட்ட மற்றொரு ஜாதிப் பெண்ணை மணம் புரியலாமேயன்றி அதற்கு முன் செய்யலாமென்று சொல்லவில்லையே."

சேஷையர் :—"முன்னே பின்னே, எப்படியாவது ஒருவாறு சம்மதிக்கிறது. ஒவ்வொரு வருணத்தாரும் தமக்குக் கீழுள்ளவர்களிடத்தில் விவாகம் புரிந்துகொள்ளலா மென்பது அனுமதிக்கப்பட்டிருக்கிறது. ஜாதி வித்தியாச மென்றீரே; ருக் வேதம், மிகப்பழமையானது. வெகு காலத்திற்கு முன் ஏற்பட்டது. அதன் முதல் ஒன்பது மண்டலங்களிலும் ஜாதி வித்தியாசத்தைப்பற்றி ஏதேனும் சொல்லப்பட்டிருக்கிறதா? அகஸ்தியராகிய பிராமணன், க்ஷத்திரியனான விதர்ப்ப மன்னன் புத்திரியாகிய லோபாமுத்திரை என்பவளை விவாகம் செய்து திரிதசி என்ற புத்திரனைப் பெறவில்லையா? பிருகு முனிவர் என்ற பிராமணர் ஒரு க்ஷத்திரியப் பெண்ணையே மணந்தார். அவருக்கு அந்த க்ஷத்திரியப் பெண்ணினிடமாகப் பிறந்தவர் ஜமதக்கி முனிவராகும். அந்த ஜமதக்கி மணஞ்செய்தது, ரேணுகை என்ற இராஜகுமாரியை சுக்கிராச்சாரி என்ற பிராமணர், தமது முதற்புதல்வி தேவயானையை யயாதி மஹாராஜனாகிய க்ஷத்திரியனுக்குக் கொடுத்தார். மற்

அவன் சூத்திரனே.' கௌசிகன் என்று சொல்லப் பட்ட விஸ்வாமித்திரர், க்ஷத்திரியனுக்குப் பிறந்து க்ஷத்திரிய கர்மப்படி அரசுரிமைகள் செய்து, பின் பிராமணருக்குரிய தொழில்களை வழுவாது நடத்தி பிரம்மரிஷியானார். பராசரஸ்மிருதியை வேலைமெனக் கெட்டு உட்கார்ந்து எழுதினாரே பராசரமுனிவர், அவர் பரிமளகன்னி அல்லது மச்சகன்னி என்ற க்ஷத்திரியப் பெண்ணைக் கூடி வேதவியாசரைப் பெற்றார். அந்த வியாசர், தந்தை செய்த தொழிலைக் கைக்கொண்டதனால் பிராமணரானார். வியாசருக்கு க்ஷத்திரியப் பெண்களிடமாக திருதராஷ்டிரனும், பாண்டுவும், விதுரனும் பிறந்தார்களே. அவர்களேன் பிராமணராகக் கூடாது என்று கேட்டால் அவர்கள் செய்த தொழிலாலேயே. நான் விகடனாயிருக்கிறேன் என்மகனும் விகடனாகத் தானிருப்பானே? ஆனால் அவனும் என்னைப் போல் பேசப்படித்தால் விகடனாகலாம். என் பிள்ளைகளும் சந்ததியாருமே தான் விகடனாகலாமோ? பிரயாசைப்பட்ட எல்லாருமே விகடனாகலாம். நாதுவையர் நன்றாய்ப் பாடினால் அவர்மகனும் சங்கீதத்துடனேயே பிறப்பானே? அதெல்லாம் கிடைக்கவே கிடையாது. மேலும், உயர்ந்த ஜாதியிற் பிறந்தவுடன் அதற்குரிய குணங்களெல்லாம் தானே அமையுமென்று சிலர் எண்ணுகிறார்கள். அது தப்பு. சுக்கிராச்சாரியின் புத்திரி தேவயானை, முதலிற்றன் தந்தைக்கு சிஷ்யனாயிருந்த கசன் என்பவனை மணம்புரிய விரும்பியிருந்தாள். அதற்கு கசன் சம்மதிக்கவில்லை. இந்த தேவயானை, தனக்குத் தோழியாயிருந்த ஒரு அரசன் மகளை ஒரு

சமயத்தில், 'கேவலம் அரசனாகிய நீசன் மகள்,' என்று சொன்னாள். அப்படிச் சொன்னவள், பின் ஒரு அரசனையே மணந்தாள். இவள் பிராமணப் பெண்ணாய் பிறந்திருந்தும் இவளெப்படிப் பதிவிரதையாவாள்? எப்பொழுது ஒருவனை மணம்புரிய விரும்பினளோ அப்பொழுதே அவள் அவனுடையவளாகிறளே அவளெப்படி வேறொருவனை மணக்கலாம்? கவிமுனிவரின் பத்தினி முதுக்கை என்பவள் பிராமணப் பெண்தானே? அவள், தனக்கு தாக நீர் கொடுக்கும்படி கேட்ட ருக்மாங்கத ராஜனை, தன் விரகதாபத்தைத் தீர்க்கச் சொன்னாள். அவர் மறுக்க அவரைச் சபித்தாள். பின், இந்திரன் ருக்மாங்கதனின் உருக்கொண்டு அவளைச் சேர்ந்து போயினான். க்ஷத்திரியப் பெண்ணாகிய காந்தாரி என்பவளின் தந்தை, முதலில் திருதராஷ்டிரனுக்கு காந்தாரியை விவாகம் செய்து கொடுக்க இசைந்தான். பின், வான்குருடனாயிருப்பதை எண்ணிமறுக்க, காந்தாரி, 'என்னை எப்பொழுது திருதராஷ்டிரனுக்குக் கொடுப்பதாய்ச் சொன்னீரோ அப்பொழுதே நான் அவருக்கு மனைவியாய் விட்டேன். ஆகையினால் வேறொருவனை மணந்தால் என் கற்பிற்குப் பங்கம் வரும்', என்று அவரையே மணந்தாள். தூய்! இன்னும் எவ்வளவோ இருக்கின்றன. அதிகமாகச் சொல்லப் போனால் வீண் நேரந்தான் போகும். இப்பொழுதாவது தெரிந்துகொண்டீரா? எல்லாம் ஒன்று. மனிதர்களெல்லாம் மனிதர்கள்தான். கடவுளுக்குமுன் ஜாதிவித்தியாசமே கிடையாது. எந்த ஜாதியானாலும், நல்லவர்களே கடவுளின் திருப்பாதத்தை அடையலாம். கடவுள்

அதில் வித்தியாசம் காட்டுபவரே யல்லவென்பது, பெரியபுராணம், நந்தன் சரித்திரம் முதலியவற்றால் தெரியலாம். எல்லா மறிந்த பரமஞானியாகிய கடவுளும் ஜாதிவித்தியாசம் பாராட்டத் தக்கவரல்ல. அவர், மனிதரையும் தம்மைப் போலவே யெண்ணுகிறார். அப்படியிருக்க, மனிதராகிய நாம் 'நமக்குள் ஜாதிவித்தியாசம் ஏற்படுத்திக்கொண்டது நமது அற்பத்தனமாகும். அப்பரம்பொருளுக்கு எல்லாரும் ஒன்றே. இதை நாம் தெரிந்து அதன்படி நடக்கவேண்டியதைவிட்டு, ஜாதிவித்தியாசத்தைப்பற்றி சாஸ்திரங்கள் சொல்லுகின்றன வென்பது, கடவுளுக்குத் திருப்தியானதல்ல. மனத்திருப்தி யிருந்தாால் எந்த ஜாதியிலும் விவாகம் செய்யலாம். திரிசங்குவை ஒரு முனிவர், 'சூத்திரனாகக் கடவை' என்று சாபமிட்டாரே, உடனே திரிசங்கு சூத்திரன் வயிற்றில் பிறந்துதான் சூத்திரனானானோ? ஜமதக்நி முனிவருக்குப் பிறந்த மூன்று மூத்த குமாரரும் பிதாவின்சொற் கேளாததினால், ஜமதக்நி அவர்களை வேடராகச்சபிக்க, உடனே வேடரானார்கள். பின்னால் அவர் மன்னிக்க, பழையபடி பிராமணரானார்கள். இதனாலென்ன தெரிகிறது? தந்தை சொற் கேளாதவன், பெரியோரை மனம் வருந்தச்செய்தவன், பிராமணனாயிருந்தாலும் பிராமணனல்ல. இதைக் கவனித்தால் இந்த ஜாதி வித்தியாச மெல்லாம் பறந்து விடும். தெரிந்ததா ஐயா? ஐயா-சாமி-வாத்தியாரே!"

என்றதும் ஐயாசாமி ஐயரைச் சேர்ந்தவர்களெல்லாம், 'போதும் போதும, என்றார்கள். இதற்

குள் ஒருவர் ஐயாசாமி ஐயரைத் தனித்தழைத்துப் போய், "விகடன் சொன்னது தப்போ சரியோ, அதை ஒன்று முடித்துக்கொள்ள வேண்டியதுதான்; நாம் மறுத்தால் மகாராஜாவுக்கு நம் மேற் கோபமுண்டாகும்; நமக்கிதிலென்ன தொந்தரவு? செட்டி சரியான பணக்காரன்; ஒருவேளை நமக்கெல்லாம் தக்க சன்மானமும்* செய்வான். மஹாராஜாவும் நல்ல மரியாதை செய்வார். இதை விட்டு விட்டு நாமேபோய் நம்மைப் பகைக்கு ஏன் வைத்துக்கொள்ள வேண்டும்! திருப்தியாய் ஒருமாதத்திற்கு பிராமண போஜனம் கிடைக்கும். அதற்கு மேல், வேஷ்டி துணி வேறு இருக்கிறது. பூரி தக்ஷிணை எல்லாம் யோசிக்க, சாப்பாட்டுக்குத் தயாராய் இப்பொழுதே முன்னைத் திட்டு வைத்துக்கொள்ளும்" என்றார்.

விகடன்:- அதென்னவோ? அங்கே நாழிகடிக்கிற வேலை நடக்கிறது. இன்னுமொரு சின்ன சாஸ்திரமே சொல்லுகிறேன். இந்த விவாகம் நடைபெறுவதால், பட்ட இளவரசரின் உயிருக்கு மோசம்வருமென்று சொல்லுகிறது. அவர், அரசகுலத்தில் இனிப்பட்டத்திற்கு வர வேண்டியவர். அவர் உயிருக்கு மோசம்வருவதாயின், அது இந்தக் கலியாணம் நடைபெறுவதாலேயே என்றாகும். ஆக அந்தக் கலியாணந் தடைக்குக் காரணமாயிருப்பவர் அந்தப் பாவத்துக்குள்ளாவர். மேலும், பட்டத்தரசரை பட்டத்துக்கு வரவிடாது தடுத்த இராஜத்துரோகக் குற்றம் ஏற்படும். அப்போது அதில் சம்பந்தப்பட்ட

* சன்மானம்—வெகுமதி

வர்களையெல்லாம் தூக்கிற்போட வேண்டிவரும். யோசித்துக்கொள்ளுங்கள்."

ஐயாசாமிஐயர்:—"ஊரோடொத்து வாழ்," 'ஊருடன் பகைக்கின் வேருடன்கெடும்' என்றபடி நாலு பேரோடு நாமும் சரியென்று போகவேண்டியதே நியாயம். கலியாணத்திற்குப் பின் பிராயச்சித்தமாவது செய்யச் சம்மதிக்கிறீர்களா?"

விகடன்:—"ஏது! வாத்தியார், 'கொன்றைவேந்தன்' பாட்டெல்லாம் பாராமற் சொல்லிவிடுகிறீரே! பின்னால் என்னமோ சொன்னீரே அதென்ன? தென்னமரத்தில் தேள் கொட்டுகிறதா? திருவையாத்தானுக்கு கட்டாயம் நெறி கட்டும். பிராயச்சித்தமாம்! இது உமக்கு இளம்பிராயத்தில் பிடித்த பித்தமா, அல்லது முதிர் பிராயத்திற் கொண்ட உன்மத்தமா? * உமக்கு வரும்படி அதிகரிக்கச் செய்வதற்கு என்னென்னவழி யென்று தோன்றுகிறதோ அவற்றையெல்லாம் சொல்லும். பிராயச்சித்தம் செய்தால் அதில் கொஞ்சம் பணந்தட்டலாம். புரிகிறது! ஊம்! தங்கள் திருவாயை மூடிக்கொண்டு தெய்வமே யென்றிருங்கள். மங்களமாய்க் கலியாணம் முடிவதற்கு நாங்களெல்லாம் நினைத்துக்கொண்டிருக்கும்பொழுது, பிராயச்சித்தமாம்! வினை உளராதேயும். உமக்குப் பூரி ஏராளமாகக் கொடுக்கச் சொல்லுகிறேன். அதை அதிகப் படுத்துவதற்கு வழியா யிது? தெரிகிறது-இல்லை-பிடிபடுகிறது. பார்ப்பானல்லவா? பலவழிகளிலும்

---

† உன்மத்தம் = மயக்கம் — பிராயச்சித்தம் = செய்த தவறுக்குச் சாந்தி.

பார்ப்பான்.' 'காக்கை நோக்கறியும் கொக்கு, டப்பறியும்,' என்றபழமொழி கேட்டிருக்கிறீரா? பெண்ணும் பிள்ளையுந்தான் காக்கைகள். பத்தாம் திருநாள் சாயுங் காலத்திலேயே காக்கைளிரண்டும், ஒன்றையொன்று பார்த்து நோக்கறிந்துகொண்டன. அதாவது, மனதினால் கலியாணம் செய்துகொண்டார்கள். நாமெல்லோரும் கொக்குகள். கலியாணத்திற்கு வேட்டுகள், பாணங்கள், அதிர்வெடிகள் முதலியவற்றின் ஓசை கேட்டதற்குப் பிறகுதான் கொக்குகளாகிய நமக்கு, கலியாணமென்று தெரியவரும். அவர்களுக்குள் மானதம் * கலியாணம் முடிந்துவிட்டதனால், வீண் சங்கடங்களுக்கு இடங்கொடுக்காமல், 'டப்' சத்தம், காதில் கேட்கும்படியான வழிகளைப் பாருமையா."

ஐயாசாமி ஐயருக்கு பதிற்சொல்ல விளங்கவில்லை. மஹாராஜாவினிடத்தில் விவாகத்தை நிறைவேற்றலாமென்று கூறியே ஜயித்ததென்று சொல்லப்பட்டது.

பின், வள்ளிநாயகியின் ஜாதகத்தையும், இளவரசனின் ஜாதகத்தையும், பொருத்தம் பார்க்க ஆரம்பித்தார்கள். விவாகப் பொருத்தங்கள் யாவும், மிக நன்றாய் அமைந்திருந்தன. அதன்பின், சமஸ்தான ஜோசியர்களால், சித்திரைமாதம் பதினெட்டாந் தேதி, புதன்கிழமை உதயாதி மூன்று நாழிகைக்குமேல் ஏழரை நாழிகைக்குள், திருமங்கலியதாரணம் செய்விப்பதாய் நிச்சயிக்கப்பட்டது. சுவாமி கிருபையால்

* மானதம் = மனம்.

கலியாணம் யாதொரு இடையூறுமில்லாமல் நன்றாக நடைபெற்றுச் சுகமே வாழ்வார்களாக. மஹாராஜா வீட்டுக்கலியாணமென்றால் அதன் சிறப்பைக் கேட்கவா வேண்டும்? எல்லாம் ஒரு மாதந்தானே இடையில் இருக்கிறது, பார்ப்போம்.

---

## ஆரும் அத்தியாயம்

### போனநாள் நடந்தவை புதிதாக வந்தன.

---

இன்று, பங்குனிமாதம் பன்னிரண்டு தேதிகளாகிவிட்டன. திருச்செந்தூர் மேலவீதியில் ஒரு வீட்டின்கண், தன்மேற் பாரத்தை அது தாங்குமோ என்பது போன்ற மின்னற்கொடியொத்த இடையும், அதற்குமேற் போகப்போக கொஞ்சங் கொஞ்சமாய் விரிந்த உடலும், நரம்புகளாவது தொண்டையாவது வெளிப்படைத்திராமல் மெல்லிதாக வாய்ந்த கழுத்தும், முருக்கம்பூவிதளோ, அதுமில்லையென்றால், கொவ்வைக் கனிதானோ என்றதிசயிக்கத்தக்க உதடுகளும், கோணவில்லாமலும் மேடுபள்ளங்களில்லாமலும் ஒரே வரிசையாய் பவழத்துண்டின் மேலுண்டான, நீலங் கலந்த வைரம் போன்றபற்களும், கடைந்தெடுத்ததுபோன்ற நாசியும், நவரத்தினங்களைப் பழிப்பனபோன்ற பிரகாசமுள்ள கண்களும், கறுத்தடர்ந்த கூந்தலும், தனக்கு ஒப்பற்ற அழகிருந்தாலும் அதை அறியாதது போன்ற பார்வையு

முள்ள ஒரு ரூபவதியான பெண், விளக்கு வைத்த சிறிது நேரத்திற்குப் பின்னர், கட்டிலிலுட்கார்ந்து, வாயிலையும் விளக்கையும் அடிக்கடி பார்த்து கண்களைத் துடைத்துக் கொண்டாள். அவள் கண்களாகிய மலரிலிருந்து கண்ணீர் வடிவதானது, சந்திரனைக் கண்ட சந்திரகாந்தக்கற்கள் கசிந்துகொண்டிருப்பதுபோலிருந்தது. அவள் கண்களைத்துடைத்துக் கொண்டபோதிலும், ஊற்றுக் கண் அம்மையார் உள்ளிருந்து கிளம்பிக் கொண்டேயிருந்தாள். ஏன் இவ்வளவு வருத்தம்? அனந்தராமனும் இளவரசனும் கொற்கைக்குப் போயிருக்கிறார்கள். அனந்தராமன், தன்னுடனில்லாதது பற்றியே, சீதாலக்ஷ்மி வருந்தி அழுது கொண்டிருக்கிறாள்.

சீதாலக்ஷ்மிக்கு தன் சகோதரனைக் காணாமல் அரைக்ஷணமும் இருக்கமுடியாது. அன்று சாயுங்காலமே வரவேண்டியவன், இரவு அவ்வளவு நேரமாகியும் வரவில்லை. சாயுங்கால முழுவதும் வாசலில் நின்று அவன் வரவிற்கு எதிர்பார்த்துக்கொண்டே நின்றாள். கால்களும் சலித்துவிட்டன. மனம் சலிப்படைந்தாலன்றோ மறுபடியும் பார்க்கமாட்டாள். சீதாலக்ஷ்மியின் தாய் கலியாணி அம்மாள் இவள் அழுவதைப்பார்த்து, "என்னடி! சீதா! உனக்கு இதுதான் வேலையாகிவிட்டது. அவன் ஒரு ஊருக்குப்போனால் க்ஷேமமாய்த் திரும்பிவரட்டுமென்று உன் காரியத்தைப் பார்த்துக்கொண்டிருப்பதை விட்டு, இப்படி அழுதுகொண்டிருக்கிறாயே; உனக்கேற்கவே இது நல்ல சகுனமா? முகத்தைக் கழுவி,

பொட்டிட்டுக்கொண்டு, சந்தோஷமாயிரு. நாளை உனக்குக் கலியாணமாகி உன் அகமுடையான் அகத்திற்குப்போனால் அங்கேயும் அண்ணு உன் பின்னோடு வருவானோ ?"

சீதாலக்ஷ்மி :—"எனக்கு கலியாணமும் வேண்டாம். அகமுடையான் அகத்திற்குப் போகவும் வேண்டாம்."

கலியாணி அம்மாள் :—"சரிதாண்டி ! நீ வேண்டாமென்றால் யாரடி கேட்கப் போகிறார்கள் ?"

என்று சொல்லிக்கொண்டிருக்கும் பொழுதே, அடுத்தவீட்டுப் பார்வதி அம்மாள், சீதாலக்ஷ்மி அழுவதையும் அவள் தாய் கோபிப்பதையும் கண்டு, "ஏதம்மா ! குட்டி சீதா அழுகிறாள் ? நீ என்ன சொன்னாய்." என்று கேட்டாள்.

கலியாணி அம்மாள் :—நானொன்றுஞ் சொல்லவில்லை. அவளண்ணு இளவரசரோடு கொற்கைக்குப் போயிருக்கிறான். சாயுங்காலமே வரவேண்டியவன் இன்னமும் வரவில்லை. போய் மூன்று நாட்களாகிவிட்டன. மஹாராஜா வீட்டுப்பிள்ளையுடன் போயிருக்கிறான். சௌக்கியமாய் வந்து சேருவான். அவன் போனது முதல் இவளுக்கு இந்தவேலைதான் பெரிதாக இருக்கிறது. அதிலும், வரவேண்டிய நேரம் கழிந்தவுடன் அழுகை அதிகப்படுகிறது. என்ன சொன்னாலும் கேட்பதற்கு வழியில்லை. 'நாளை உனக்கு கலியாணமாகி அகமுடையான் அகத்திற்குப்போனால் அண்ணுவும் கூடவே வருவானோ?'

என்று கேட்டதற்கு, 'கலியாணமும் வேண்டாம் புக்ககத்திற்கு*ப் போகவும் வேண்டாமென்கிறாள்."

பார்வதி அம்மாள் :—"அதென்னடீ! அப்படிச் சொன்னால் முடியுமா? என்று பெண்ணாகப் பிறந்தோமோ அன்றே நாம் தாய் தகப்பனுக்குச் சொந்தமல்ல என்றெண்ணிக்கொள்ள வேண்டியதுதானே. அப்பா அம்மா இன்னும் எத்தனை நாட்களுக்கு வைத்துக்கொண்டிருப்பார்கள்? இப்பொழுது இப்படித்தான் சொல்லுவாய். கழுத்தில் மஞ்சள்நூல் ஏறிவிட்டால் அப்புறம் அண்ணாவையும் கவனிக்கமாட்டாய், அம்மாவையும் தேடமாட்டாய்."

என்று சொல்லிச் சிறிதுநேரம் வேறு பல பேச்சுகள் பேசிக்கொண்டிருந்து, தன்வீட்டிற்குச் சென்றாள். கலியாணி அம்மாள், தன் கணவர் சாப்பிட்டவுடன், சீதா லக்ஷ்மியைச் சாப்பிடவரும்படி கூப்பிட்டாள். சீதாலக்ஷ்மி, "எனக்குச் சாப்பாடுவேண்டாம், பசிக்கவில்லை" என்று சொல்லவே, "அம்மா! எனக்கும் சாப்பாடுவேண்டாம். அவளோடு நானும் பட்டினியாகவே இருக்கப்போகிறேன்" என்று சொல்லிக்கொண்டு அனந்தராமன் உள்ளேவந்தான். சீதாலக்ஷ்மி உடனே எழுந்து கண்களைத் துடைத்துக்கொண்டு, அகமும் முகமும் மலர, "அண்ணா!" என்று ஆனந்த பாஷ்பம் பெருக நின்றாள். அனந்தராமனும், "சீதா!" என்று சந்தோஷக் கண்ணீர்விட்டான். இவர்களிருவரும் நடந்துகொண்டதைப் பார்

* புக்ககம்=புகுந்தவீடு, வாழ்க்கைப் பட்டவீடு.